# தொல்காப்பியம் உரைவளம்

## எழுத்ததிகாரம்

# உருபியல்

தொகுப்பாசிரியர்
ஆ. சிவலிங்கனார்

பதிப்பாசிரியர்
முனைவர் கோ. விசயராகவன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (உரைவளம்) உருபியல்

பதிப்பாசிரியர்

ஆ. சிவலிங்கனார்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# நூல்விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | தொல்காப்பியம் - உருபியல் |
| பதிப்பாசிரியர் | : | ஆ. சிவலிங்கனார்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை - 600 113. |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | A57 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு ஜூலை 1982 |
| மீள்பதிப்பு | : | 2015-2016 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6கிகி டி.என்.பி.எல்<br>வெள்ளை |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | xxiv+88+16 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1000 |
| விலை | : | ரூ.60/- (ரூபாய் ஆறுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா அச்சகம்<br>144, தம்புத் தெரு<br>சென்னை - 600 001 |
| பொருள் | : | இலக்கணம் |

முனைவர் **கோ. விசயராகவன்**

எம்.ஏ., எம்.ஃபில், எம்.பி.ஏ., பி.எட்., பிஎச்.டி.

இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## அணிந்துரை

வழக்கம் போல் நிறுவனத்திலிருந்து வெளிவரும் 'தொல்காப்பிய நூல் உரைவள வெளியீட்டுத் திட்டத்தின் வரிசையில் ஒன்பதாவது நூலாகத் 'தொல்காப்பியம் உரைவளம் - உருபியல்' என்னும் நூல் வெளி வருகிறது.

தமிழகத்தில் தொல்காப்பிய உரைவளத்திற்கு நல்ல வரவேற்பு இருப்பதைப் பல கடிதங்கள் வாயிலாக நாங்கள் தெரிந்து கொள்கிறோம். தமிழ் மக்களுக்கு இவ்வுரை வளக் கோவை மிகுதியாகப் பயன்படும் என்று நம்புகிறோம்.

அந்நிலையில் இதனை முறையாக, செவ்வனே செய்து வருகின்ற பதிப்பாசிரியர் திரு. ஆ. சிவலிங்கனாரையும், அவர்க்கு உதவியவர்களையும் பாராட்டுகிறேன்.

**மாண்புமிகு தமிழ்நாடு மக்கள் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள்** தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு தமிழ்நாடு மக்கள் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளை அவரது 67 ஆம் ஆண்டு பிறந்தநாளில் நூலை வெளியிட்டு பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி**

அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம்** இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறோம்.

இந்த நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# பதிப்புரை

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் ஆறாம் இயலாகிய உருபியலைத் தொல்காப்பிய நூல் உரைவள வெளியீட்டுத் திட்டத்தின் ஒன்பதாம் வெளியீடாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடுகின்றது. தொல்காப்பியச் சிறப்புப்பாயிர உரைவளம் முதல் வெளியீடாகவும், பொருளதிகார மரபியல் உரைவளம் ஐந்தாம் வெளியீடாகவும் சொல்லதிகாரக் கிளவியாக உரைவளம் எட்டாம் வெளியீடாகவும் வெளியிட்ட மையின் இந்நூல் ஒன்பதாம் வெளியீடாகிறது.

இதில் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைகளும் சுப்பிரமணிய சாஸ்திரியார், வேங்கடராசுலு ரெட்டியார் குறிப்புகளும் உள்ளன. கருத்துமாறுபாடு அதிகம் இன்மையின் வெள்ளைவாரணனார் கருத்துக் குறிப்பு அதிகம் இல்லை. முன் வந்த இயல்களிற் போலவே இதிலும் இலக்குவனார், கமீல்கவலபில் ஆகியோர் நூற்பா மொழி பெயர்ப்புகளும், பிற்கால இலக்கண நூல்களிலிருந்து ஒப்புமை நூற்பாக்களும் தரப்பட்டுள்ளன.

என்னால் எழுதப்பட்ட 'உருபியல் ஓர் அறிமுகம்' என்னும் கட்டுரையும் சேர்க்கப்பட்டுள்ளது.

வேற்றுமை உருபுகளைப் பற்றி கருத்து மாறுபாடுகள் பலவுண்டு. அவை வேற்றுமையியல் வேற்றுமை மயங்கியல் தொடர்பாக அமைதலின் அவ்வவ்வியல்களின் உரைவள வெளியீடுகளில் சேர்க்கப்பட வேண்டதலின் இவ்வியலில் விடப்பட்டன.

மகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர் அவர்களால் துட்டச்சுசெய்து அனுப்பிவைக்கப்பட்ட அரசஞ் - சண்முகனாரின் நுண்பொருட் கோவையின் ஒரு பகுதி பிறப்பியல் உரைவள நூலின் பின் இணைப்பாகச் சேர்க்கப் பட்டது. அப்பகுதியும் முற்றுப்பெறா நிலையில் உள்ளது . அதனைக் கண்ணுற்ற சோழவந்தன் சிவப்பிரகாச சுவாமிகள் மடாலய (கிண்ணிமடம்) அறங்காவலர் சி. கன்னியப்ப முதலியார், மேலும் கிடைக்கப் பெற்ற தொடர்க் கட்டுரைகளைப் போட்டோ படிமம் (Xerox) செய்து அனுப்பி வைத்தார்கள். அது உருபியலின் பின் இணைப்பாக நன்றியுடன் சேர்க்கப்பட்டது. அக்கட்டுரைத்

தொடரும் முடியவில்லை; இன்னும் வரம் என்ற அளவில் அமைந்தது. அதன் தொடர்ச்சியினைக் காண்பாருளராயின் அதனைப் படி எடுத்து எம் நிறுவனத்துக்கு அனுப்பி வைப்பின் நன்றியுடன் வெளியிடவாய்ப்பாகும்.

இந்நூல் வெளிவரக் துணை புரிந்தோர் டாக்டர் வை.இரத்தினசபாபதி, டாக்டர் ச.சிவகாமி. டாக்டர் கே. பகவதி புலவர் க. வா. சச்சிதானந்தம், மயிலம் தமிழ்க் கல்லூரி முதல்வர் துரை கார்த்திகேயன், பேராசிரியர் வே. சிவசுப்பிரமணயன் ஆகியோராவர்.

விரைந்து தொழிற்படுத்தியும் செய்தும் தமிழ்த்தொண்டு புரிந்து வரும் எங்கள் நிறுவன இயக்குநர் அவர்கட்கும், பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய அவர்கட்கும் நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்த நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

ஆ.சி

# பொருளடக்கம்

# உருபியல்-ஓர் அறிமுகம்

உருபு-பெயர்க்காரணம்

உருபியல் என்பதில் உள்ள உருபு என்பது வேற்றுமையுருபு களாகிய ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் ஆறனையும் குறிக்கும்.

உருபு என்பதன் முதல்நிலை உரு என்பதாகும். உரு என்பது வடிவத்தைக் குறிக்கும். ஐ முதல் கண் வரையிலும் உள்ள ஆறும் தொடர்ப் பொருளின் வடிவத்தை—ஒலிவடிவத்தைத் தெரிவிப்பன ஆதலின் அவைகள் உரு எனப்பட்டன. உரு என்பது பு சேர்ந்து உருபு ஆயிற்று.

முருகன் என்னும் பெயர்ச்சொல் வந்தான் என்பதனோடு தொடரும்போது முருகன் வந்தான் என எழுவாய் பயனிலை வகையில் தொடர்கிறது. முருகனின் வடிவத்தை, பொருளினை வேறுபடுத்தும் உருவாக ஐ முதலிய ஆறும் இருத்தலின் அவை வேற்றுமை உருபு எனப்பட்டன.

ஐ—முருகனை அழைத்தான் —செய்யப்படும் வடிவம்
ஒடு—முருகனொடு அழைத்தான் —உடனிகழ்ச்சி வடிவம்
கு—முருகனுக்கு அளித்தான் —கோடல் வடிவம்
இன்—முருகனின் அழைத்தான் —நீங்கல் வடிவம்
அது—முருகனது கை —உடைமை வடிவம்
கண்—முருகன்கண் அழைத்தான் —இடவடிவம்.

இவற்றில் ஐ முதலியன முருகனைச் செய்யப்படும் பொருள்/வடிவம் முதலியவாக உருப்பெறச் செய்தலைக் காண லாம்.

இந்நிலையில் பார்த்தால் உருப் பெறச் செய்வன யாவும் உருபு எனப்படும் என்னலாம்.

வந்தனன் என்னும் சொல்லின் முதல்நிலை வா என்பதே. அதை வந்தனன் என்னும் உருப்பெறச் செய்தன பல. வா + ந் + த் + அன் + அன் என அச்சொல்லைப் பிரிக்கலாம். ந் என்பது த் என்னும் சந்தியின் விகாரம். அச்சொல்

பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் என்னும் ஆறு பிரிவில் அடங்கும் முதற்பிரிவாகிய வா என்னும் பகுதியை மற்றைப் பிரிவுகள் சேர்ந்து வந்தனன் என்னும் உருப்பெறச் செய்தன. எனவே விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்பனவும் உருபு என்று கூறுதற்குரியனவேயாம். விகுதி உருபு சாரியையுருபு இடைநிலையுருபு என்னும் சொல்லாட்சியிருத்தலை யும் காணலாம். ஆனால் சாரியையுருபு விகுதியுருபு என்பன போல் அடைமொழியின்றி உருபு என்று மட்டும் சொன்னால் அது வேற்றுமையுருபையே குறிப்பதாயிற்று.

உருபியல்

புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப்புணரியல் என்னும் ஆறு இயல்களும் நிலைமொழி வருமொழிகள் சேரும்போது நிகழும் செய்கை களைக் கூறுவன. உருபியல் என்பது வேற்றுமை உருபுகளை வருமொழியாக வைத்து இலக்கணம் கூறுவதாம். வேற்றுமை யுருபுகள் பெயர்வழி வருவன ஆதலின் இவ்வியலின் பெயர்க் காரணம் கூற வந்த இளம்பூரணர் முதலிய உரையாளர்கள் "உருபுகளோடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தியமையின் உருபியல் என்னும் பெயர்த்து" என்றனர். உயிர் மயங்கியல் புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என்பன நிலை மொழிகள் வருமொழிகளோடு புணரும் இலக்கணம் கூறுவன. அவ்வகையில் உருபியல் என்பதும் வேற்றுமையுருபுகள் நிலை மொழிகளாக நின்று வருமொழிகளோடு புணரும் இலக்கணம் கூறுவதோ என்று எண்ணத் தோன்றும். ஆனால் அவ்வாறன்றி உருபுகள் வருமொழிகளாகவர நிலை மொழிப் பெயர்கள் எவ்வாறு ஆம் என்பது உருபியலில் கூறப்படுகின்றது. நிலை மொழிகள் உயிரீறு மெய்யீறுகளாக அமைதலினால் உயிர்மயங் கியலிலும், புள்ளி மயங்கியலிலும் அடக்கிவிடலாம் என்றாலும் அவை பெயர் வினை இடை என்னும் மூன்று சொற்களுக்கும் இலக்கணம் கூற, உருபியல் பெயர்ச் சொற்களுக்கே இலக்கணம் கூறுதலினால் தனியியலாகக் கூறப்பட்டது. அன்றியும் அவ்வழி வேற்றுமைப் பொருள்கள் பற்றியும் அவை கூறுதலும் வேறு பாடாம்.

உருபியல் எனப் பெயரிருந்தாலும் உருபுகள் அடையும் திரிபு குறித்து இதில் கூறப்படவில்லை.

II

ஐஒடு குஇன் அதுகண் என்னும்
அவ்வா றென்ப வேற்றுமை யுருபே (புணரியல் 11)

என உருபுகள் பற்றியும்,

வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு
ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும் (புணரியல் 12)

ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈறாகு அகரமுனைக் கெடுதல் வேண்டும் (புணரியல் 13)

எனச் சில உருபுகள் திரியுமாறு பற்றியும்,

வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே (புணரியல் 14)

என அவைபெயர்ப் பின்வருமாறு பற்றியும் புணரியலில் வருவது காணலாம். இவ்வாறு புணரியலில் தொல்காப்பியர் கூறக் காரணம் விளங்கவில்லை.

செய்கையோத்துகளாக உருபியல் முதலிய நான்கையும் கொண்டதனால் உருபுகள் பற்றிய திரிபுகள் கருவித் திரிபுகள் எனக் கொண்டு புணரியலில் கூறினார் போலும்.

உருபியற் செய்திகள்:

உயிர் எழுத்துப் பன்னிரண்டனுள் எகரம் மொழியிறுதியில் வாராமையாலும், ஒகரம் நகரமெய்யொடு மட்டும் கூடி ஏவல் வினையாக 'நொ' என வருமேயன்றிப் பெயரொடு வாராமையா னும் எகரமும் ஒகரமும் தவிர மற்றைய பத்து உயிர்களையும் இறுதியிற் கொண்ட பெயர்ச்சொற்களுக்கு உருபுகளோடு புணருங்கால் உண்டாம் திரிபுகள் இவ்வியலிற் கூறப்பட வேண்டும். ஆசிரியர், இகரம் ஒழிந்த ஒன்பது உயிரீற்றுப்பெயர் களுக்கே இலக்கணம் கூறினார்; ஏன்?

அ ஆ உ ஊ ஏ ஔ என்னும் உயிர்களை ஈற்றில் உள்ள பெயர்கள், உருபுகள் வருமொழிகளாக வரின் இடையில் இன் சாரியை பெறும் என்றார். விளவினை பலாவினை கடுவினை, கழுஉவினை, சேவினை என உதாரணம் காண்க. விளவை பலாவை என வருதல் இல்லை. வெள என்பது வெளவுதல் தொழிலையுணர்த்தும், அது வெளவை என வருதல் இல்லை

வெளவினை என்றே வரும். எனவே மேலே காட்டிய ஆறு உயிர் ஈற்றுச் சொற்களும் இன்சாரியை பெற்றே வரும் என்றறிதல் வேண்டும். அவ்வுயிர்களுள் அகர உயிரையிறுதியாகவுடையபல்ல என்னும் சொல் (பல்ல + ஐ =) பல்லவற்றை என வற்றுச் சாரியை பெறும். வற்றின் பின்னர் பல்லவற்றினை என இன்சாரியை பெறலாம். அதுபோலவே யா என்னும் ஆகார ஈற்றுச்சொல்லும் யாவற்றை யாவற்றினை என வரும். அது என்னும் உகர இறுதிச் சுட்டுப் பெயர் அன்சாரியை பெற்று அதனை என வரும். அவை, யாவை என்னும் ஐகார ஈற்றுப் பெயர்களும் வற்றுச் சாரியை பெற்று அவையற்றை, யாவற்றை எனவரும்

நீ என்னும் ஈகார ஈற்றுப் பெயர் (நீ + ஐ) நின்னை என நெடு முதல் குறுகி னகர ஒற்றுமிக்கு வரும். ஓகார இறுதிச்சொல் கோ என்பது. அது ஐ உருபுடன்சேரும்போது ஒன் சாரியை பெற்றுக் கோஒனை எனவரும்

அ ஆ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் எழுத்துகளையீற்றில் உள்ள பெயர்ச்சொற்கள் உருபுகளுடன் சேரும்போது சாரியை பெற்றேவரும் என்பது பெறப்படும் இது தொல்காப்பியர் கால வழக்கு.

இகர ஈற்றுச் சொல்லானது (கிளி என்பது கிளியை கிளி யினை எனச்) சாரியை பெற்றும் பெறாமலும் வருதலின் அதை ஆசிரியர் கூறாமல் புறனடையால் பெறவைத்தார்.

மெய்யீற்றுப் பெயர்ச் சொற்களுள் ஞ ந ம வ ழ ன என்பன வற்றையீறாகவுடைய சொற்களுக்கே இலக்கணம் கூறினார். ஏன் எனின் அவைகளும் உருபொடு புணர்வுழிச்சாரியை பெற்றே வருவன. உரிஞினை, பொருநினை, உருமினை, தெவ்வினை, ஏழனை, அழனினை எனக்காண்க இவை உரிஞை பொருநை உருமை, தெவ்வை ஏழை, அழனை என வாரா வரின் வேறு பொருளும் தந்துவிடும்.

மொழியீற்றில் வரும் மெய்கள் பதினொன்று. அவற்றுள் ஞ ந ம வ ழ ன என்னும் ஆறு ஈறுபற்றியே கூறினார் ஒழிந்த ணகர, யகர ரகர, லகர, ளகரங்கள் பற்றி ஆசிரியர் கூற வில்லை; ஏன் எனின் அவை சாரியை பெற்றும் பெறாதும் வரும். மண்ணினை மண்ணை, வேயினை வேயை, நாரினை

நாரை, கல்லினை கல்லை, முள்ளினை முள்ளை என்பன காண்க.

நாரினை என்பது நாரை எனவரின் நாரைப்புள் எனவும் பொருள் படாதோ எனின் படுமாயினும் தொல்காப்பியர் காலத்தில் அவ்விருவழக்கும் இருந்திருக்க வேண்டும் எனக் கொள்ளலாம்.

பிற்காலத்தில் சாரியை பெற்றே வரவேண்டும் எனப்பட்டன சாரியை பெறாமலும் வழங்குவனவாயின. பழம் ஏழையும் தின்றான், தெவ்வைவென்றான் என்பன உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் வருகின்றன.

இங்குக் குறித்த பெயர்ச் சொற்கள் யாவும் அஃறிணைப் பெயர்களும் பொதுப் பெயர்களுமே யாம். உயர்திணைப் பெயர்கள் குறிக்கப் படவில்லை. பெரும்பாலும் அவை சாரியை பெறுவனவல்ல. நம்பியை, கொற்றனை எனப் பெறாமலே வரும்.

சாரியைகள்

உருபியலில் கூறப்பட்ட சாரியைகள் இன், வற்று, அன், ஒன் அத்து, உம். நம், தம், நும், ஆன் என்பனவாம். புணரியலில் ஆசிரியர் சாரியைகளின் பட்டியல் தருகின்றார். அது,

> இன்னே வற்றே அத்தே அம்மே
> ஒன்னே ஆனே அக்கே இக்கே
> அன்னென் கிளவி உளப்படப் பிறவும்
> அன்ன என்ப சாரியை மொழியே. (புணரியல் 17)

என்பது. அதில் சொல்லப்படாதனவான உம், நம், தம், நும் என்பனவற்றைச் சாரியை என்று கூறச் சிலர் ஒருப்படுவதில்லை. சாரியைப் பட்டியற் சூத்திரத்தில் காணப்படும் அக்கு, இக்கு, அம் என்பன உருபியலிற் கூறப்படவில்லை. உருபுடன் பெயர் புணரும் புணர்ச்சியில் அவை எவ்விடத்தும் வாராமையே காரணம். ஆனால் உருபின் பொருள் படவரும் புணர்ச்சியில் அதாவது வேற்றுமைப் பொருட்புணர்ச்சியில் அக்கும் இக்கும் உம்மும் வரும். சமக்குடம் (புள்ளிமயங்கியல் 34) ஆடிக்குக் கொண்டான் (உயிர்மயங்கியல் 46)பனங்காய் (உயிர்மயங்கியல்81)

என்பனவற்றில் காணலாம். ஆசிரியர் சாரியைகளை ஆண்டுள்ள இடங்களைக் கொண்டு பார்க்கின் சாரியைகள் பெயர்க்கும் வேற்றுமையுருபுக்கும் இடையில் வரும்; அல்லது பெயர்க்கும் வேற்றுமைப் பொருள் தொடரில் வரும் வருமொழிக் கும் இடையில் வரும் என்பதே அவர் கருத்து என்பது புலப்படும். அதனால் தான் அவர்,

உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயர் என்று
ஆயிரண் டென்ப பெயர் நிலைச் சுட்டே (புணரியல் 15)

என்னும் சூத்திரத்தையடுத்து

அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே (புணரியல் 16)
என்னும் சூத்திரம் அமைத்துப் பின்னர் "அவைதாம், இன்னே வற்றே" என்னும் சாரியைப் பட்டியற் சூத்திரம் அமைத்தார். 'உண்டனன்' போலும் வினைச் சொற்களின் இடையில் வரும் அன்சாரியை பற்றியோ பிறசாரியை பற்றியோ ஆசிரியர் கூற வில்லை. கரம், காரம், கான் என்னும் எழுத்துச் சாரியைகள் கூறியுள்ளார்.

இனிச் சாரியைகள் பற்றிய சில கருத்துகள் காணலாம்.

இன்சாரியை

இன்சாரியை இரண்டு மூன்று நான்கு ஆறு ஏழு என்னும் வேற்றுமையுருபுகளின் முன்னர் வரும் விளவினை, விளவினால், விளவினுக்கு, விளவினது, விளவின்கண் எனக்காண்க. டாக்டர் பொன் கோதண்டராமன் அவர்கள் இன்சாரியைபற்றிக் கூறு வது வருமாறு.

"இன்சாரியை அன் ஈற்றுப் பெயர்களுக்குப் பின் வருவதில்லை. வேலனினை, அரசனினை, வேலனினது, அரச னினதுஎனச்சொற்கள் அமைவதில்லை என்பதைக் கருதுக. அன் ஈற்றுப் பெயர்களுக்குப் பின்னால் இன்சாரியை வருவதில்லையென்பது நன்கு தெளிவான பிறகு வேலனின் இல்லம் வேலனின் நட்பு. வேலனின் மனைவி என வரும் தொடர்களையும் காண்கிறோம். இங்கே நாம் காணும் இன் என் கிளவி சாரியையாக இருக்க இயலாது. சாரியையல்ல

வெனின் அதனை நாம் ஆறன் உருபாகத்தான் கொள்ள வேண்டும்.

குன்றத்திருந்தான் என்றதொடரில் காணும் அத்து என்பதனை இடப்பொருள் குறித்ததாகக் கருதுவது பொருத்தமா? இங்கு இதனை சாரியை என்று கருதலாமா? இத்தகைய வினாக்களுக்கு விடைகாண மேலும் நாம் இது பற்றி ஆராய வேண்டும்.''

என்று கூறுவர். சொற்கள் நிலைவருமொழியாகத் தொடரும் போது அவற்றைப் புணர்த்த இடையில் சாரியை வந்தேயாக வேண்டும் என்னும் விதியில்லை. சிலவிடங்களில் வந்தேயாக வேண்டும். பல+ஐ=பலவற்றை எனவருவதும் பலவை என வாராமையும் காண்க. இப்படி வந்தே திரும் சாரியையினைக் கட்டாயச்சாரியை என்பர் அவர். ஊர்+ஐ= ஊரினை ஊரை எனச் சாரியை பெற்றும் பெறாமலும் வருவதும் உண்டு. இதனை விருப்பச்சாரியை என்பர் அவர். அவ்வாறே விளவினை என்பதில் இன்சாரியை வருதலும் வேலனை என்பதில் இன் சாரியை இல்லாமையும் ஆம். உருபு புணர்ச்சி போலவே உருபின் பொருள்படவரும் பொருட் புணர்ச்சியிலும் சாரியை வருதலும் தவிர்தலும் உண்டு. வாளின்வடு, வாள்வடு எனக்காண்க அவ்வாறே வேலனின் இல்லம் வேலன் இல்லம், வேலனின் நட்பு வேலன் நட்பு என்பனவும் ஆம். அதனால் இன் என்பதை ஆறன் உருபாகக் கொள்ள வேண்டுவதின்று. வேலன் இல்லம் வேலன் நட்பு என்றுதான் உலகவழக்கில் உண்டு. வேலனின் இல்லம் என்பது போல்வன செய்யுள் வழக்காகலாம்.

வேலனின் மனைவி என்பதில் இன் சாரியையேயன்றி உருபாகாது, ஏன்எனின் அது நான்காம் வேற்றுமைத் தொடர். வேலனுக்கு மனைவி என்பதே அதன்பொருள். அதனால் வேலனின் மனைவி என்பதில் இன் உருபில்லை,

---

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை தொகுதி-2 பக்-83 அண்ணாமலைநகர்-1982.

இனி. குன்றத்திருந்தான் என்பதிலும் அத்து என்பது உருபா காது. ஏன் எனின் குன்றத்தின் இருந்தான் என அத்துச் சாரியை யின் பின்னர் ஏழன் உருபு இன் வருதல் காண்க. எனவே குன்றத் திருந்தான் என்பது பொருட் புணர்ச்சி யாதலின் உருபின்றிச் சாரியை மட்டும் வந்ததாம். குன்றத்திருந்தான் என்பதில் ஏழன் உருபாகக் கொள்ளலாமாயின் மரத்துக் கிளை என்பதில் உள்ள அத்து என்பதை ஆறன் உருபாகக் கொள்ள வேண்டும்.

வேலனின் வீடு என்பதில் இன் ஆறன் உருபு எனக் கொள்வ தாயின் வாளின் வீழ்த்தினான் என்பதில் இன் மூன்றன் உருபாகக் கொள்ளல் வேண்டும். பொருளின் விலை என்பதில் இன் நான் கன் உருபாகக் கொள்ளல் வேண்டும். இயல்பாகவே ஐந்தன் உரு பாகவும் இன் அமைந்துள்ளது. எனவே இன் என்பது இரண்டன் உருபு தவிரப் பிற எல்லா உருபுகளாகவும் வரும் என்பது ஆகும். அதனால் இன் ஆறன் உருபாக வரும் என்பதும் அத்து ஏழன் உருபாக வரும் என்பதும் பொருத்தம் இல்லை என்க.

தம், நம், நும், உம்

இனி, தம், நம், நும், உம் என்னும் சாரியைகள் பற்றி டாக்டர் பொன் கோதண்டராமன் கூறுவனவற்றைக் காணலாம்.

"எல்லாம் என்னும் சொல்லும் எல்லாரும் என்னும் சொல் லும் வேற்றுமை ஏற்கும் போது எய்தும் மாற்றங்களைப் பற்றித் தொல்காப்பியர் உருபியலில் பேசுகின்றார் (காண்க தொல். எழுத்து 190, 191, 1 '2) எல்லாம் என்ற சொல் இரண்டாம் வேற்றுமை ஏற்கும் போது எல்லாம்+வற்று+ஐ+உம் என அமைந்து எல்லாவற்றையும் எனவரும். இங்கே காணும் வற்று என்பதைத் தொல்காப்பியர் சாரியை என்று தெளிவாகச் சுட்டு கின்றார். (காண்க. தொல் எழு. 131) இங்கே இறுதியில் காணும் உம் என் கிளவி விதியின் மூலம் வருக்கப்பட்ட ஒன்று. சந்தி விதியின் மூலம் வருவிக்கப்பட்டதாதலால் இதனைப் பிற கால உரையாசிரியர்கள் சாரியை யென்று கொள்கின்றனர். இவ்வாறே எல்லார் தம்மையும், எல்லா நம்மையும் எல்லீர் நும்மையும் ஆகியவற்றில் காணும் தம், நம், நும் ஆகியவற்றை யும் பிற்கால உரையாசிரியர்கள் சாரியை என்றே கருதத் தொடங்கி விட்டனர். இந்த கருத்தை உறுதிப் படுத்துவார் போல நன்னூலாரும் தம், நம், நும் என்பனவற்றைச் சாரியைப் பட்டியலிலே தெளிவாகச் சேர்த்துவிட்டார். ஆனால் தொல்

காப்பியர் இவற்றைச் சாரியைப் பட்டியலில் சேர்க்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தம், நம், நும் முதலியவற்றைத் தொல்காப்பியர் விதிகளின் மூலம் வருவித்திருக்கிறார் என்பது (தொல். எழு. 192) உண்மைதான் என்றாலும் இவற்றை அவர் சாரியை என்று கொண்டார் என்பதற்குத் தகுந்த சான்றுகள் இல்லை. ஆகவே விதிகளால் அறிமுகப்படுத்தப்பட்ட எல்லாவற்றையும் சாரியை என்று கொள்வது எவ்வளவு தூரம் பொருத்தம் என்பது ஆராயத்தகுந்தது. தொல்காப்பியர் தாமே சாரியை என்று வெளிப்படையாகக் குறிப்பிட்டுத் தம்முடைய சாரியைப் பட்டியலில் சேர்க்காமல் விட்டுவிட்ட சாரியையும் ஒன்றுண்டு. (காண்க தொல். எழு. 166) உழக்கே ஆழாக்கு, கலனே பதக்கு, ஆறேகால் ஏழேமுக்கால் முதலியவற்றில் காணும் ஏகாரத்தைத் தொல்காப்பியர் ஏஎன்சாரியை என்றே குறிக்கிறார். ஆனால் இந்த ஏகாரம் அவர் கூறும் சாரியைப் பட்டியலில் இடம் பெறவில்லை. இது ஒன்றை மட்டும் சான்றாகக் கொண்டு தம், நம், நும், உம் முதலிய எல்லாமே தொல்காப்பியர் கருத்தின்படிச் சாரியைதான் என்று வாதிடுவது பொருந்தாது.''‡

பொன் கோதண்டராமன் அவர்கள், 'தம், நம், நும், உம் என்பனவற்றைத் தொல்காப்பியர் விதிகளால் அறிமுகப் படுத்திய காரணத்தால் சாரியைகள் எனக் கொள்வதற்கில்லை' என்பது ஏற்பதற்கில்லை. சாரியைப் பட்டியலில் அவை கூறப் படாமையும் ஒரு காரணம் என்பர் அவர்:

> ''தமக்கென்று தனிப்பட்ட பொருள் இல்லாதனவாகவும் தமக்கென்று வரையறுக்கப்பட்ட தோன்றிடங்கள் உள்ளனவாகவும் பகுதியோடு சேர்த்துப் பகுதியாகவோ விகுதியோடு சேர்த்து விகுதியாகவோ கொள்ள இடந்தராதனவாகவும் அமைந்துள்ள சொற்கூறுகளுக்குத் தமிழ் இலக்கணப் புலவர்கள் சாரியை என்று பெயர் கொடுத்தது மிகவும் பொருத்தம்''†

எனவும்,

---

‡ இந்தியப் பல்கலைத்தமிழாசிரியர் மன்றம், பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை தொகுதி 2, பக் 82 83 அண்ணாமலை நகர் (1982)

† ,, பக் 81.

"பலவற்றை பலவற்றால் எனவரும் சொற்களில் பல என்ற அடிச்சொல்லுக்கும் ஐ, ஆல் முதலாகிய வேற்றுமை யுருபுகளுக்கும் இடையில் அற்று என நிற்கும் ஒரு சொற் கூறினையும் பார்க்கிறோம். இது பகுதியோடு சேர்க்கத் தக்க தாகவும் இல்லை வேற்றுமை விகுதியோடு சேர்க்கத் தக்க தாகவும் இல்லை. ஆனால் பகுதியையும் வேற்றுமை விகுதி யையும் சேர்க்க இது இன்றியமையதாதாக உள்ளது. இப்படிப்பட்ட சொற்கூறுகளைத்தான் நம்முடையமரபிலக் கணங்கள் சாரியை என்று குறிக்கின்றன."‡

எனவும் அவரே கூறுவதைக்கொண்டு, எல்லார் தம்மையும், எல்லா நம்மையும், எல்லீர் நும்மையும் என்பனவற்றில் வரும் தம், நம், நும் என்பனவும் சாரிபைகளே என்ன லாம். எல்லார், எல்லாம், எல்லீர் என்பனவாகிய பகுதிப் பெயர்களையும் ஐ என்னும் விகுதியினையும் சேர்க்க வந்தனவே அவையாதலின் சாரியைகள் என்பதில் தடையில்லை. ஆனால் எல்லார் தம்மையும் என்பதில் இறுதியிலுள்ள உம் சாரியையாகுமா, என்பது ஐயமே. ஏனெனின் அந்த உம் முழு மைப் பொருளைத் தருதலின் முற்றும்மை என்னுந் தகுதி பெறுகிறது.

டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி அவர்கள் தம், நம், நும், உம் என்பன சாரியைகளே என்பர். அவர் கருத்தே உடன்படத் தக்கது ஆதலின் அவர் கூறியவற்றை அப்படியே இங்கு எடுத்து எழுதுகின்றேன்.

"இனி நம், தம், நும் ஆகியவை இடம்பெறும் நூற்பாக் களில் சாரியைகள் என்ற சொல் இல்லை. ஆனால் இவை களைப் பற்றிக் கூறும் நூற்பாக்களை அவற்றின்முன் நூற்பாவோடு இணைத்துப் பொருள் கொள்ளின் அவைகள் தொல்காப்பியர் கருத்துப்படிச் சாரியைகளே என்பது நன்கு புலனாகும்

‡ இ. ப க. த. மன்றம் 14—ஆம் கருத்தரங்கு ஆய்வுக் கோவை தொகுதி 2. பக். 79.

எல்லா மென்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதியான''

(எல்லாம் என்ற மகர ஈற்றுச் சொல்முன் வற்றுச் சாரியை முழுமையும் தோன்றி இறுதியில் உம் பெற்றுமுடியும். எ-கா எல்லாவற்றையும்)

இந் நூற்பாவை யடுத்து,

உயர்திணை யாயின் நம்மிடை வருமே

என்ற நூற்பாவுளது. எல்லாம் என்பது உயர்திணைப் பெயராயின் வற்று என்னும் சாரியைக்குப் பதிலாக நம் என்னும் சாரியை வரும் என முன் நூற்பாவோடு இதனைத் தொடர்பு படுத்திப் பொருள் கொள்வது பொருத்தமாகும். எ. கா. எல்லா நம்மையும்
இவ்வாறே

"..................................
தம்மிடை வருஉம் படர்க்கை மேன
நும்மிடை வருஉம் முன்னிலை மொழிக்கே''

(படர்க்கையில் தம் சாரியையும் முன்னிலையில் நும் சாரியையும் வரும் என்பதாம் எ—கா. எல்லார் தம்மையும், எல்லீர் நும்மையும்)

தொல்காப்பியர் காலத்தமிழில் இங்ஙனம் இவைகள் சாரியைகளாகக் கொள்ளப்பட்டன.'' †

அக்கு இக்கு வற்று

"தொல்காப்பியர் காலத்தில் சில சாரியைகளைப் பிறழப் பிரித்திருக்கிறாரோ என்று எண்ண வாய்ப் புண்டு அவர் கூறும் அக்குச் சாரியை இக்குச்

---

† இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 4. பக்கம் 132, 132, 133
அண்ணாமலை நகர். 1982

> சாரியை முதலாயவற்றையும் வற்றுச் சாரியையினையும் பிறழ் பிரிப்போ என்று கருதலாம். அவர் கூறும் வற்றுச் சாரியை வற்றாகவே கொள்ளப்படவேண்டும்; அற்றாகக் கொள்ள இயலாது என்று வாதிடுவதற்கான ஆதாரங்கள் ஒன்றும் நமக்கு இப்போது கிடைக்கவில்லை; ஆகவே சில சாரியைகள் பிறழப் பிரிக்கப் படடிருக்கக் கூடும் எனக் கருத இடம் உண்டு. எனினும் இந்த செய்தி மேலும் ஆராய்ந்து முடிவு செய்யத் தக்கது"‡

இவ்வாறெழுதியவர் பொன் கோதண்டராமன். சாரியைகள் சில வற்றைத் தொல்காப்பியர் பிறழப் பிரித்திருப்பார் என்பது ஏற்றுக் கோடற்கில்லை அக்கு. இக்கு, வற்று என்னும் சாரியைகள் அவ்வப்படியே அவர் காலத்து வழங்கியவாகும்.

குன்றக்குக் கூகை எனத் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர் வழங்கி அவர் காலத்தில் குன்றக் கூகை என மாறி யிருக்க வேண்டும் என்பதும், ஆடிக்குக் கொண்டான் என்பதில் இக்கு என்பதே சாரியை என்பதும் வற்றுச் சாரியையே பின்னர் அற்றுச் சாரியையாகியது என்பதும் தொல்காப்பிய உரைவளம்-எழுத்ததிகாரம்—புணரியல் என்னும் நூலில் புணரியல்—ஓர் அறிமுகம் என்னும் கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளன விளக்கம் வேண்டி அவை அப்படியே இங்கும் தரப்படுகின்றன.

"பிற்காலத்தார் அக்கு இக்கு என்னும் இரண்டு சாரியைகளையும் நீக்கி அ, கு என்னும் இரண்டு எழுத்துச் சாரியைகளைக் கொண்டனர். அக்குச் சாரியை முழு வடிவத்தில் எங்கும் ஆளப்படவில்லை. குன்று + அக்கு + கூகை = குன்றக்கூகை என்பதில் அக்கின் அகரம் மட்டும் நின்றது. க்,கு என்பன கெட்டன. அதனால் பிற் காலத்தார் அக்குச் சாரியை கொள்ளாமல் அகரச்சாரியை கொண்டது பொருத்தமே அக்குச் சாரியை எங்கும் முழு வடிவில் வாராது. அகர எழுத்து மட்டில் வர மற்றைய எழுத்துகள் கெட்டு வரும் என ஆசிரியர் விதி கூறியுள்ளார். (எழு-128) 'அ' என்பதே சாரியை எனக்கொண்டால் இவ்விதி தேவையற்றதுதான். ஆசிரியர் ஏன் கூறினார்? குன்றக்கூகை என்பது குன்றக்குக்கூகையென்றே ஆசிரியர் காலத்துக்கு முன்னர் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். அவர் கால இலக்கண நூல்களில் இவ்வழக்குக்கே இலக்கணம் கூறப்பட்

‡ ஷ்டி தொகுதி 2. பக். 83

டிருத்தல் வேண்டும். ஆனால் ஆசிரியர் காலத்தில் செய்யுளிலும் வழக்கிலும் குன்றக்குக் கூகை என்பதில்லாமல் குன்றக்கூகை என்பதே வழங்கியிருத்தல் வேண்டும். அதனால் முன்னோர் கொண்டதற்கேற்ப முதலில் அக்குச் சாரியை உண்டென்று கூறிப்பின்னர் அது புணர்மொழியிடைவரின் அகரமாக மாறும் என்றார். அக்குச் சாரியை கூறியது முதல் நூல் கருத்து. அகர மாகத் திரியும் எனக்கூறியது வழி நூல் கருத்து எனக் கொள்ள லாம்.

''ஆடி—இக்கு = ஆடிக்கு என வருமிடத்தில் இகரம் கெடும் எனத் தொல்காப்பியர் கூறினர். (எழு 126) பிற்காலத்தார் இக் குச் சாரியை கொள்ளாமல் 'கு' சாரியை எனக் கொண்டு இடை யில் வல்லெழுத்து மிக்கதாகக் கொண்டனர். ஆடியில் கொண் டான் என்பது ஆடிக்குக் கொண்டான் என வருதலின் கண் உருபு நிற்கும் இடத்தில் கு உருபு நின்றது வேற்றுமை மயக்கம் என்ன லாம். வருவர் என்பது வருகுவர் என வருமிடத்துக் கு சாரியை பெற்றது. அதனால் கு சாரியையினைப் பிற்காலத்தார் சேர்த் தது பொருத்தமே. இக்கு என்னும் சாரியை வழக்கு வீழ்ந்த தாகக் கொள்ளலாம்.

ஆசிரியர் வற்று எனக் கொண்ட சாரியையினைப் பிற்காலத் தார் அற்று எனக் கொண்டதேன்? வற்று என்பதைக் கெப்ள்வ தால் ஒரு குறையும், அற்று எனக் கொள்வதால் ஒரு குறையும் வருகின்றன. வற்றாயினும் அற்றாயினும் பன்மைப் பெயர் வழியே வரும்.

பல + வற்று + ஐ என்பன யாதோர் மாற்றமும் இன்றிப் பல வற்றை என வரும். பல + அற்று + ஐ என்பன வகர உடம்படுமெய் பெற்ற மாற்றத்துடன் பலவற்றை எனவரும். இதனால் வற்று என்றே இருத்தல் பொருந்தும்.

அவ் + வற்று + ஐ என்பன வகரஒற்றுக்கெட்டு அவற்றை என வரும் அவ் + அற்று + ஐ என்பன யாதோர் மாற்றமும் இன்றி அவற்றை எனவரும் இதனால் அற்று என்றே இருத்தல் பொருந் தும். எனினும் இதில் ஓர் சிக்கல் உண்டு. அவ் + அற்று என்பன சேரும்போது குறியதின் இறுதி தன் உருபு இரட்டல் (எழுத். 160) என்பதற்கேற்ப அவ்வற்று என வாராமை நோக்கத்தக்கது.

| | |
|---|---|
| யா—யாவற்றை | அவ்—அவற்றை |
| பல—பலவற்றை | யாவை—யாவற்றை |
| பிற—பிறவற்றை | எவை—எவற்றை |
| கிளந்த—கிளந்தவற்றை | எல்லாம்—எல்லாவற்றையும் |

மேலே உள்ள இரண்டு வரிசைக் கூட்டுகளில், முன் வரிசையில் நிலைமொழியீறு மாற்றம் இன்மையின் வற்று மாறுபடுதல் இல்லை. வற்றுக்குப் பதில் அற்று கொள்வதாயின் வகர உடம் படுமெய் தேவை. இரண்டாம் வரிசையில் நிலைமொழியீறுதிக் கேடுண்டு. இங்கு வற்று எனக் கொள்வதால் யாதும் மாற்றம் இல்லை. அற்று எனக்கொள்வதால் வகர உடம்படு மெய்தேவை. அவையற்றை என்பதில் எதுவாயினும் மாற்றம் உண்டு. எனவே அற்றுச் சாரியை கொள்வதினும் வற்றுச் சாரியை கொள்வதே சிறக்கும்.''

மொழியியல் அறிஞர் டாக்டர் முத்துச் சண்முகன் வற்று பற்றிக் கூறுவனவருவாறு:

> ''அவன், அவள், அவர்; இவன், இவள் இவர்: உவன், உவள், உவர்; எவன், எவள், எவர்; அவற்றை இவற்றை, உவற்றை; எவற்றை; பலவற்றை, சிலவற்றை இவ்வடிகளை (stem) அது, இது, உது, எது இவைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது சுட்டுப் பெயர்களுக்கும் வினாப்பெயர்களுக்கும் அடிச் சொற்களில் இரண்டு வடிவங்கள் இருப்பதைக் காணலாம். அவ், இவ், உவ், எவ் என்பன ஒருவகை வடிவம். இவ்வடிவங்கள் எப்பொழுதும் உயிர் எழுத்துக்களின் முன்புதான் வரும் (உ-ம் அவ் + அன், எவ் + அன், இவ் + கள், உவ் + கள் முதலியன).
>
> அ, இ, உ என்பன மற்றொரு வகை வடிவங்கள். இவை மெய்யெழுத்துக்களின் முன்புதான் வரும். (உ-ம்) அ + து இ + து எ + து இதுபோல் பலவ்; சிலவ். எல்லாவ். (உ-ம்) பலவ் + அற்றை: சிலவ் + அற்றை, எல்லாவ் + அற்றை என்பன. பல சில எல்லாம் என்பனவற்றின் உயிர்முன் வருமவடிவங்கள்;
>
> இவ்வாறு இச்சொற்களைப் பகுப்பதால் பகுப்பில் ஒரு வரன் முறையைக் காண்கிறோம் இதனால் இச்சாரியை வற்று எனக்கொள்வதைவிட, அற்று எனக்கொள்வதே பொருந்தும். நன்னூலாரும் அற்றுச் சாரியையே வகுத் தார்'' *

---

* இக்காலத்தமிழ், (பக் 231), முத்துப்பதிப்பகம், மதுரை மூன்றாம் பதிப்பு 1977.

இவ்வாறு வற்று என்பது சாரியையன்று அற்று என்பதே சாரியை என அவர் கூறுவதற்கு அவர் கூறும் ஒரு காரணம், "சொற்களைப் பகுக்குமிடத்துக் காணப்படும் ஒரு வரன் முறையே" ஆகும். மொழியியல் வரன் முறையும் மரபிலக்கண வரன் முறையும் ஒத்து வருவதும் உண்டு; ஒவ்வாது பிரிதலும், உண்டு அவர் கூறிய வரன் முறை ஒவ்வாப் பிரிவினையே என்னலாம், சுட்டு வினாப் பெயர்களின் அடிச் சொற்களில் இரண்டு வடிவங்கள் உண்டு என்றும், அவை அவ், இவ், உவ், எவ் எனவும் அ, இ, உ, எ எனவும் ஆம் என்றும் கூறுவர். மொழியியலடிப்படையில் கூறுவதானால் இரண்டில் ஒரு வடிவமே முன்னைய வடிவமாகும். முன்னைய வடிவம் அவ். இவ் உவ், எவ் என்பனவா அல்லது அ, இ. உ, எ என்பனவா என முதலில் நிறுவவேண்டும்; அவர் நிறுவவில்லை. அவ், இவ், உவ், எவ் என்பன பன்மை வடிவங்கள் (தொல். பெயரியல் 12) என்பர் தொல்காப்பியர், ஆ. ஈ, ஊ என்னும் நெடில் எழுத்துகளே முதலில் சுட்டுப் பொருளை உணர்த்தப் பயன்பட்டன என்றும் பின்னரே அவை அ. இ, உ எனக்குறுகி வந்தன என்றும் கூறும் மொழியியலறிஞரும் உளர்‡ அவர் கூற்று ஏற்கக்கூடியதாயின் அவ், இவ், உவ் என்பன முன்வடிவம் ஆகா. ஆக்கப்பெயர்கள் என்னும் கட்டுரையில்,

> "அகர இகரச் சுட்டும், எகர வினாவும் பால்காட்டும் உருபினை ஏற்கும் பொழுது அவ் இவ் எவ் எனமாறும்
>
> அ + அன் → அவன்
> இ + அன் → இவன்
> எ + அன் → எவன்"

என்று எழுதிய இடத்தில் அ, இ, எ என்பனவே அவ், இவ் என்று என மாறியதாகக் காட்டினார்† அவ்விடத்து அவ், இவ், எவ் என்பன திரிபுவடிவங்களாக அவர் கூறியது மாறுபட்டதாகும். எனவே சுட்டு வினாக்களின் முன்வடிவம் எவை எனத்துணியாத வரையில் அவர் வற்றுச்சாரியையன்று அற்று என்பதே சாரியை என்பது ஏற்பதற்கில்லை.

ஆ. சிவலிங்கனார்.

---

† இக்காலத் தமிழ் பக்கம் 96.

## சுருக்க விளக்கம்

ஆ. மொ.—ஆங்கில மொழிபெயர்ப்பு
இ. ப. க த. மன்றம்—இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

இல—இலக்குவனார்
இல—வி.—இலக்கண விளக்கம்
இ—ள்.—இதன் பொருள்
இளம்—இளம்பூரணர்
உ-ம்.—உதாரணம்
உயிர்ம—உயிர்மயங்கியல்
உரு, உருபி—உருபியல்
உவம—உவமவியல்
எழு, எழுத்—எழுத்ததிகாரம்
எ—று.—என்றவாறு
க. சு.—கமில்சுவலபில்
கற்பு, கற்பி—கற்பியல்
குறள்—திருக்குறள்
சிவ. —சிவலிங்கனார்
சுப்.—சுப்பிரமணியசாஸ்திரியார்
சு. வே.—சுவடிவேறுபாடு
சொல்.—சொல்லதிகாரம்
தொல்.—தொல்காப்பியம்
தொல்—பொருள்—தொல்காப்பியப் பொருளதிகாரம்
நச்—நச்சினார்க்கினியர்
நன்.—நன்னூல்
நேமி—நேமிநாதம்
பரிபா—பரிபாடல்
பி. இ நூ.—பிற்கால இலக்கண நூல்கள்
பி. கு—பிறகுறிப்புகள்
புள்ளி—புள்ளி மயங்கியல்
புறத்—புறத்திணையியல்
பெய—பெயரியல்
பேரா—பேராசிரியர்
பொருள்—பொருளதிகாரம்
முத்து—முத்துவீரியம்
முத்தொள்—முத்தொள்ளாயிரம்
வெள்—வெள்ளைவாரணனார்
வேங்—வேங்கடராசலு ரெட்டியார்

## System of Transliteration

### உயிரெழுத்துகள்—Vowels

| இலக்குவனார் | கமீல்சுவலபில் |
| --- | --- |
| அ—a | a |
| ஆ—ā | ā |
| இ—i | i |
| ஈ—ī | ī |
| உ—u | u |
| ஊ—ū | ū |
| எ—e | e |
| ஏ—ē | ē |
| ஐ—ai | ai |
| ஒ—o | o |
| ஓ—ō | ō |
| ஔ—au | au |

### மெய்யெழுத்துகள்—Consonants

| | |
| --- | --- |
| வல்லினம் | |
| க்—k | k |
| ச்—s | c |
| ட்—ṭ | ṭ |
| த்—th | t |
| ப்—p | p |
| ற - ṟ | ṟ |
| மெல்லினம் | |
| ங்—ṅ | ṅ |
| ஞ்—ñ | ñ |
| ண்—ṇ | ṇ |
| ந்—n | n |
| ம்—m | m |
| ன்—ṉ | ṉ |
| இடையினம் | |
| ய்—y | y |
| ர்—r | r |
| ல்—l | l |
| வ்—v | v |
| ழ்—ḻ | ḻ |
| ள்—ḷ | ḷ |

# தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் (உரைவளம்)

## உருபியல்

### இளம்பூரணர்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உருபுகளோடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமையின் உருபியல் என்னும் பெயர்த்து. மேல் தொகுத்துப் புணர்த்த செய்கை ஈண்டு நின்றும் விரித்துப் புணர்க்கின்றாராகலின், தொகைமரபினோடு இயைபு உடைத்தாயிற்று.

### நச்சினார்க்கினியர்

உருபுகளோடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமையின் இவ்வோத்து உருபியல் என்னும் பெயர்த்தாயிற்று. மேல் தொகுத்துப் புணர்த்ததனை ஈண்டு விரித்துப் புணர்க்கின்றா ராகலின், இவ்வோத்துத் தொகைமரபோடு இயைபுடைத் தாயிற்று.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

பெயரும் வேற்றுமையுருபும் புணரும்போது உண்டாம் மாறுதல்களை இவ்வியலிற் கூறினர் ஆசிரியர். புணர்ச்சி மாறுதல் களைத் தொகுத்துக் கூறிய பின்னர் அவற்றை உருபியல் முதலிய நான் கியல்களிலும் விரித்துக் கூறினர்.

நிலைமொழியிறு உயிராயிருக்க நேருமவற்றைப் பதின்மூன்று சூத்திரங்களிலும், குற்றியலுகரமாயிருக்க நேருமவற்றை ஏழு சூத்திரங்களிலும், புறனடையை ஒன்றிலும் கூறினர்.

**வெள்ளைவாரணனார்**

வேற்றுமை உருபுகளோடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமையின் இஃது உருபியல் என்னும் பெயர்த்தாயிற்று. பெயரும் அதனோடு புணரும் வேற்றுமையுருபும் ஆகிய அவ்விரண்டிற்கும் இடையே வரும் சாரியைகள் இவை என்பதும், வேற்றுமையுருபினை ஏற்குங்கால் பெயர்கள் பெறும் இயல்பும் திரிபும் ஆவன இவை என்பதும் இவ்வியலில் வகுத்து விளக்கப் பெற்றுள்ளன.

**இலக்குவனார்**

Chapter on the mode of having the case signs.

**கமில் சுவலபில்**

Morpho Phonemic rules in inflection.

**உயிரீறுகள்**

*அகர ஈறுமுதலியவற்றில் வேற்றுமையுருபிற்கு இன்சாரியை.*

174. †அ ஆ உ ஊ ஏ ஔ என்னும்
அப்பா லாறன நிலைமொழி முன்னர்
வேற்றுமை யுருபிற்கு இன்னே சாரியை. (1) *

**ஆங்கில மொழி பெயர்ப்பு**
**இலக்குவனார்**

a, ā, u, ū, ē and ou
Before those six endings of standing words
The case sings have the increment 'in'.

---

* சூத்திரத்தின் முதலில் உள்ள எண் எழுத்ததிகாரத் தொடர் எண்; இறுதியில் உள்ள எண் உருபியல் தொடர் எண்.

† கன்னட மொழியில் (சப்தமணி தருப்பணம் சூ. 110) மூன்றாம் வேற்றுமை முதலிய வேற்றுமை யுருபுகள் வருமிடத்து, உகர ஊகார ருகார ரூகார எகர ஔகார வீறுகட்கு முன் இன்சாரியை வரும். அஃது இங்கு அறியத்தகும்—வேங்கடராகவலு ரெட்டியார்.

## கமில் சுவலபில்

The emqty morph 'in' is inserted between case markers
And the six final (phonemes) of the standing word
namely a, ā, u, ū, ē, au

## பிற்கால இலக்கண நூல்கள்

இலக்கண விளக்கம் 149.

> எல்லா ஈற்றும் சொல்லுங் காலை
> வேற்றுமை உருபிற் கின்னே சாரியை.

முத்து வீரியம் 209.

> அ ஆ உ ஊ ஏ ஔ இறுபெயர்
> முன்வரும் உருபிற் கின்னே சாரியை.

## இளம்பூரணர்

இத்தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், அகர ஆகார உகர ஊகார ஏகார ஔகார ஈறுகளும் உருபினொடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்.) அ ஆ உ ஊ ஏ ஔ என்னும் அப்பால் ஆறன் நிலைமொழி முன்னர்—அ ஆ உ ஊ ஏ ஔ என்று சொல்லப் படுகின்ற அக்கூற்று ஆறனையும் ஈறாகவுடைய நிலைமொழி களின் முன்னர், வேற்றுமை உருபிற்கு சாரியை இன்—வேற்றுமை யுருபுகள் வருமொழியாய் வந்த நிலைமைக்கு இடைவரும் சாரியை இன்சாரியை.

உ—ம் : விளவினை, விளவினொடு, விளவிற்கு, விளவினது, விளவின்கண் எனவும்; பலாவினை, பலாவினொடு, எனவும்; கடுவினை, கடுவினொடு எனவும்; † கழூஉவினை, கழூஉவினொடு எனவும்; சேவினை, சேவினொடு எனவும்; ‡ வெளவினை வெளவினொடு எனவும் கருவி அறிந்து ஒட்டுக.

## நச்சினார்க்கினியர்

என்பது சூத்திரம்.

---

† கழூஉ = கழுமரம், ‡ வெள = வெளவுதல் (விள முதலியன மரவகை.)

இச்சூத்திரம் அகர முதலிய ஈற்றான் வரும் ஆறு ஈற்றுச் சொற்கள் நின்று இன்பெற்று உருபினொடு புணருமாறு கூறுகின்றது. உருபின் பொருள்பட வரும் புணர்ச்சி மேற் கூறுப

(இ—ள்.) அ ஆ உ ஊ ஏ ஔ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஆறினையும் ஈறாகவுடைய நிலை மொழிகளின் முன்னர் வருகின்ற வேற்றுமை யுருபுகட்கு இடையே வரும் சாரியை இன்சாரியையே; எ—று.

உ—ம் : விளவினை, விளவினொடு, விளவிற்கு, விளவினது விளவின்கண் எனவும்; பலாவினை பலாவினொடு, பலாவிற்கு, பலாவினது, பலாவின்கண் எனவும்; கடுவினை, கடுவினொடு, கடுவிற்கு, கடுவினது, கடுவின்கண் எனவும்; ‡தழூஉவினை, தழூஉவினொடு, தழூஉவிற்கு, தழூஉவினது, தழூஉவின்கண் எனவும்; சேவினை, சேவினொடு, சேவிற்கு, சேவினது, சேவின்கண் எனவும்; வெளவினை, வெளவினொடு, வெளவிற்கு, வெளவினது, வெளவின்கண் எனவும் வரும். இவ்வாறே செய்கையறிந்து ஒட்டுக.

> இன்னென வருஉம் வேற்றுமை யுருபிற்கு
> இன்னென் சாரியை இன்மை வேண்டும் (எழுத். 131)

எனவே, ஏனைய இன்பெறும் என்றலின், ‘ஞ ந ம ய வ (எழு. 144) என்பதனான் இயல்பு என்றது விலக்கிற்றாம். †

‡ தழூஉ = குரவைக்கூத்து, தழுவுதல்.

† “இன்னென வருஉம்...வேண்டும்” என்னும் நூற்பாவினால் ஐந்தாம் வேற்றுமையுருபாகிய இன் என்பது இன் சாரியை பெறாது என்பதும், அதனால் ஏனைய உருபுகள் இன்சாரியை பெறும் என்பதும் பெறப் பட்டன. இவ்விதி புணரியலில் கூறப்பட்டது. இதை யடுத்த தொகைமரபில் “ஞ ந ம ய வ” என்னும் நூற்பாவில் எல்லா ஈற்று நிலைமொழிகளின் முன்வரும் ஞ ந ம ய வ என்பனவற்றையும் எல்லா உயிர்களையும் முதலாகக் கொண்டுள்ள மொழிகள் வருமொழிகளாக வரின் அவ்வருமொழி முதல் எழுத்துகள் இயல்பாகவே அமையும் என்ற விதிகூறப்பட்டது. அதனால் உயிர் முதலாகிய உருபுகள் (ஐ, ஒடு, அது) வருமொழியாகவரின் அவையும் இயல்பாம் என்பது பெறப்பட்டது. எனவே இவ்வுருபியல் முதற் சூத்திரத்தால் அவ்வியல்பாம் என்ற விதி இன்பெறும் என மீண்டும் விதிப்பதன் மூலம் விலக்கப்பட்டதாம்.

**சுப்பிரமணிய சாஸ்திரியார்**

'அப்பாலாறன் நிலைமொழி' என்றாரேனும், 'நிறுத்த சொல்லின் ஈறாகெழுந்தொடு' (எழுத். 109) என ஆசிரியர் கூறியிருக்கின்றமையான் 'அப்பாலாறனையும் ஈற்றிற் கொண்ட நிலைமொழி' எனப் பொருள் கொள்ளல் வேண்டும்.

'வேற்றுமை யுருபிற் கின்னேசாரியை' என்று கூறினாரேனும் சாரியை பெயர், வேற்றுமையுருபு இவற்றினிடையில் வரும் என்பது 'அவற்று வழி மருங்கின் சாரியை வருமே' (எழுத். 119) என்றதனாற் பெறப்படும்.

உ—ம். விள + ஐ = விள + இன் + ஐ = விளவினை. 'மாவினானும் (புறத். 21) வெருவின் கண்ணும் (கன். 20) கொண்மூவினை, சேவினை, வெளவினை.

(இளம்பூரணர் கூறிய) கழூஉ வினை, கழூஉவினொடு என்ற பாடம் அச்சுப்பிழை.† தழூஉ என்பது போன்றன ஆசிரியர் கொள்கையில் உகரவீறேயாகும்.

*அகர ஈற்றுப் பன்மைப் பெயர்கட்கு வற்றுச் சாரியை*

**175.** பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்ச மின்றே (2)

**ஆ. மொ: இல.**

The nouns ending in 'a' and denoting many will never fail to have the increment 'Varru'

**க. சு.**

Nouns ending in a and denoting 'many' will not fail having (the empty morph) varru

**பி. இ. நூ**

இல. வி. 150

பல்லவை நுதலிய அகர இறுபெயர்
அற்றொடு சிவணல் எச்சம் இன்றே.

---

† கழூஉ—அச்சுப்பிழை என்றதன் கருத்து அது தழூஉ என்றிருக்க வேண்டும் என்பதாகும். கழூஉ : கழுமரம். ஆதலின் அச்சுப் பிழை என்ன வேண்டுவதில்லை.

முத்து: 210

அகர இறுபெயர் †அற்றொடு சிவணும்.

இளம்.

இது, [1]மேற் கூறிய ஈற்றுள் அகர ஈற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுதல் நுதலிற்று.

(இ ள்.)‡பல்லவை நுதலிய பெயர் இறு அகரம்—பன்மைப் பொருளைக் கருதின பெயர்களின் இறுதி அகரம், வற்றொடு சிவணல எச்சம் இன்று—வற்றுச்சாரியையொடு[2] பொருந்துதலை ஒழிதல் இல்லை.

உ-ம்: பல்லவற்றை, பல்லவற்றொடு; உள்ளவற்றை, உள்ள வற்றொடு; இல்லவற்றை இல்லவற்றொடு; [3]சில்லவற்றை சில்லவற்றொடு என் ஒட்டுக.

'எச்சமின்று' என்றதனான் [4]ஈண்டு மூன்றாம் உருபின் கண் சாரியை பெற்றே முடியும் என்று கொள்க. இன்னும் இதனானே மேல் இன் பெற்றன பிறசாரியையும் பெறும் எனக் கொள்க. மகத்தை, நிலாத்தை எனவரும்.

நச்.

இஃது இன்சாரியை விலக்கி வற்று வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

(இ-ள்) பன்மைப் பொருளைக் கருதின பெயர்களின் இறுதி நின்ற அகரம், வற்றுச் சாரியையோடு பொருந்துதலை ஒழிதல் இல்லை; எ-று.

---

†குறிப்பு: வற்றுச்சாரியைநீக்கி அற்றுச் சாரியை கொண்டனர் பிற்காலத்தார். நன்னூலாரும் அற்றுச் சாரியையே கொண்டார்.

க. வே: 1. மேற் கூறியவற்றுள். 2. பொருந்துதல் 3. சில வற்றொடு 4. ஈண்டும் உருபு இன்சாரியை பெற்றே

‡ பல்லவை நுதலிய அகர இறுபெயர்களாவன: பல்ல, பல சில, உள்ள, இல்ல என்பன; தொல்காப்பியரால் கூறப் பட்டன. (தொல். சொல். பெய. 14) இவற்றொடு இல்ல, உள, சில என்பனவும் ஆம்.

உ-ம்: பல்லவற்றை, பல்லவற்றொடு; பலவற்றை, பலவற்றொடு; சில்லவற்றை சில்லவற்றொடு; சிலவற்றை, இலவற்றொடு; உள்ளவற்றை உள்ளவற்றொடு; இல்லவற்றை இல்லவற்றொடு என ஒட்டுக.

'எச்சமின்று' என்றதனானே மேல் இன் பெற்றன பிற சாரியையும் பெறுதல் கொள்க. நிலாத்தை, துலாத்தை, மகத்தை என வரும். இன்னும் இதனானே பல்லவை நுதலியவற்றின்கண் மூன்றாம் உருபு வற்றுப்பெற்றே முடிதல் கொள்க,

சுப்.

(பல்லவை நுதலிய அகர இறுபெயர்) வற்று, இன் இரண்டையும் கொள்ளலாம் என்பது "பிறவற்றின் நிமித்தமும்" (தொல் பொருள். புறத். 36) என்ற ஆசிரியர் வழக்காற் கொள்ளப்படும்.

"உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்" (எழுத். 133) என்றவிடத்து மூன்றாம் உருபு சாரியையின்றியும் வரும் எனக் கூறப்படினும் 'பிறவொடும்' (உவமவியல். 13) என ஆசிரியரால் வழங்கப்படினும், பல்லவை நுதலிய அகர விறு பெயர் ஆங்கு வற்றுப் பெற்றே முடியும் என உரைகாரர்கள கூறியது ஆராய்தற்பாலது.

இளம்பூரணம் நச்சினார்க்கினியம் இவ்விரண்டு உரைகளிலும் 'அகர விறு பெயர்' என்பதற்குப் 'பெயர்களின் இறுதி அகரம்', 'பெயர்களின் இறுதி நின்ற அகரம்' எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. 'நுதலிய' என்றது 'பெயர்' என்பதனைத் தழுவுதலால் அவ்வாறு கூறப்பட்டது போலும்; "அகர விறு பெயர்" என்ற தொகைமொழியைத் தழுவுகின்றது எனக் கொள்வதுவே சூத்திரப் போக்கிற்குப் பொருந்தும்.

## வேங்கடராசுலு ரெட்டியார்

'சாரியை......உடைமையும் இன்மையும் ஒடு வயின் ஒக்கும்' என்றமையான் மூன்றன் உருபில் பலவற்றொடு பலவொடு என்று வருதல் அமையுமாகலின், 'பல்லவை நுதலியவற்றின்கண் மூன்றாம் உருபு வற்றுப் பெற்றே முடிதல் கொள்க' என்று நச்சினார்க்கினியர் எழுதியது அமைவதன்று.

'எச்சமின்று' என்றதனான், மேல் இன்பெற்றன பிறசாரியையும் பெறுதல் கொள்க' என்று உரையாளர் இருவரும் கூறி

மகத்தை, நிலாத்தை என்பவற்றை உதாரணமாகக் காட்டினர். ஆசிரியர், மேற் சூத்திரத்திற் கூறிய ஆறு ஈறுகளுள் இன்சாரியையன்றிப் பிறசாரியையும் பெறுகின்ற அகர ஆகார வீற்றுச் சொற்களை முறையே எடுத்தோதுதலின், ஓதப்படாத 'மக' என்னும் அகர வீற்றுச் சொல்லும் 'நிலா' என்னும் ஆகார வீற்றுச் சொல்லும் உருபேற்குமிடத்து அத்துச் சாரியை பெறுதல் இன்று. ஆயின் 'மக' என்னும் பெயர்க்கு,

'அத்தவண் வரினும் வரை நிலை யின்றே' (எழு. 219) என்றும், 'நிலா' என்னும் பெயர்க்கு,

'நிலா வென் கிளவி அத்தோடு சிவணும்' (எழு 228) என்றும், முன்னர்ப் பொருட் புணர்ச்சிக்கண் அத்துச் சாரியை விதிப்பாராகலின் அதனை உருபு புணர்ச்சிக்கும் கோடல் அமையும் எனின், அஃது ஆசிரியர்க்குக் கருத்தாயின், இவ்வுருபியலில் அப்பெயர்களுக்கு அத்துச்சாரியையினை விதித்து முன்னர்ப் பொருட் புணர்ச்சிக்கண் இதனோடு மாட்டெறிவர்.

அது இது உது என்னும் சுட்டுப்பெயர் உருபேற்றற்கண் அன்சாரியை பெறுதலை, இவ்வியலில்,

சுட்டுமுதலுகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித் துகரம் கெடுமே (உருபி. 4)

என்று கூறி, அவை பொருட் புணர்ச்சிக்கண் அன்சாரியை பெறுதலை, முன்னர் உயிர் மயங்கியலில்,

'சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்' (உயிர். 61)

என்னும் சூத்திரத்தில் மாட்டெறிந்துள்ளார்.

அவை இவை உவை என்னும் சுட்டுப்பெயர்கள் உருபேற்றற்கண் வற்றுச் சாரியை பெறுதலை, இவ்வியலில்

சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே (உருபி. 5)

என்னுஞ் சூத்திரத்திற் கூறி, அவை பொருட் புணர்ச்சிக்கண்ணும் வற்றுச் சாரியை பெறுதலை'

'சுட்டுமுத லிறுதி உருபியல் நிலையும்' (உயிர். 79)

என்னும் சூத்திரத்தில் மாட்டெறிந்துள்ளார்.

ஏழ் என்னும் எண்ணும்பெயர் உருபேற்றற்கண் அன்சாரியை பெறுதலை, இவ்வியலில்,

'அன்னென் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப' (உருபி. 22)

என்று கூறி, அது பொருட் புணர்ச்சிக்கண் அன்சாரியை பெறுதலை, புள்ளி மயங்கியலில்

'ஏழன் கிளவி உருபியல் நிலையும்' (புள்ளி. 9)

என்னுஞ் சூத்திரத்தில் மாட்டெறிந்துள்ளார்.

பல்ல பல என்னும் பெயர்கள் உருபேற்றற்கண் வற்றுச் சாரியை பெறுதலை இச்சூத்திரத்தாற் கூறி, அவை பொருட் புணர்ச்சிக்கண் வற்றுச்சாரியை பெறுதலை,

'பலவற் றிறுதி உருபியல் நிலையும்' (உயிர். 18)

என்னுஞ் சூத்திரத்தில் மாட்டெறிந்துள்ளார்.

இவ்வாறே உருபேற்றற்கண் சாரியை பெறும் சொற்கள் பொருட் புணர்ச்சிக்கண்ணும் அச்சாரியை பெறுமாயின், முதலில் அவற்றை உருபியலிற் கூறி, பின் அகத்தோத்தில் மாட்டெறிதல் இவ்வாசிரியா இயல்பு. அவையெல்லாவற்றையும் கண்டு எடுத்தெழுதின் விரியும் என்றஞ்சி விடுக்கின்றேன்.

மேற் காட்டியவற்றால், மக, நிலா என்னும் பெயர்கள் உருபேற்றற்கண் அத்துச்சாரியை பெறுதல் ஆசிரியர் கருத்தன் றென்பது நன்கறியப்படுமாகலின் உரையாளர் காட்டினவை அமையா; மேற் சூத்திரத்தின் படி இன்சாரியையே வரும்.

யாஎன் வினாவுக்கும் வற்றுச் சாரியை

**176.** யாவென் வினாவும் ஆயியல் திரியாது. (3)

ஆ. மொ: இல.

The interrogative 'yā' also will not fail to follow the same rule

க சு.

The interrogative yā will not fail either to follow the same rule.

பி. இ நூ.

முத்து. 211. யாகார வினாவும் அவற்றோ ரற்றே.

இளம்.

இது, ஆகாரவீற்றுள் ஒரு மொழிக்கு எய்தியது* விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்.) யாஎன் வினாவும் அ இயல் திரியாது—யா என்று சொல்லப்படும் ஆகார ஈற்று வினாப்பெயரும் மேற்கூறப்பட்ட வற்றுப்பெறும் அவ்வியல்பில் திரியாது.

உ—ம்: யாவற்றை, யாவற்றொடு என ஒட்டுக.

நச்.

இஃது ஆகார ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ—ள்.) யாவென்று சொல்லப்படும் ஆகார ஈற்று வினாப் பெயரும், முற்கூறிய வற்றுப் பேற்றிற் றிரியாது; எ—று.

உ—ம்: யாவற்றை, யாவற்றொடு என வரும்.

உகர ஈற்றுச் சுட்டுக்கு அன் சாரியை

177. சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய [1]மெய்ஒழித்து உகரம் கெடுமே. (4)

ஆ. மொ: இல.

The 'u' of demonstrative disappears leaving its consonant to join 'an'

க சு.

(words which) begin with a demonstrative
(and end in) the sound 'U' take 'an'
(before the ease marker) remove (or transform?)
the appropriate consonant and lose the 'u'

பி. இ. நா.

முத்து. 212.

உவ்விறு சுட்டு அன்னொடு வரும்என்ப.

---

* 174 ஆம் சூத்திரத்தில் இன்பெறும் என்பது.

சு. வே: 1. மெய்யொழிந்து

இளம்.

இது உகர ஈற்றுட் சிலமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்.) சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி— சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகரவீற்றுச் சொல் அன்சாரியையொடு பொருந்தி. ஒட்டிய மெய் ஒழித்து உகரம் கெடும்-தான் பொருந்திய மெய்யை யொழித்து [1] உகரம் கெடும்.

உ—ம்: அதனை, அதனொடு; இதனை இதனொடு; உதனை உதனொடு என ஒட்டுக.

நச்.

இஃது உகர ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ—ள்). சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச் சொல் அன்சாரியையோடு பொருந்தி, தான் பொருந்திய மெய்யை நிறுத்தி உகரம் கெடும்; எ—று.

உ—ம்: அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு எனவரும். *அதினை அதினொடு என்றாற் போல்வன மரு, முடிப்புழி முடிந்தன. 'ஒட்டிய' என்றதனாற் சுட்டுமுதல் உகரம் அன்றிப் பிற உகரமும் உயிர் வருவழிக் கெடுவன கொள்க. அவை கதவு களவு கனவு என நிறுத்தி, அழகிது, இல்லை என வருவித்து உகரங் கெடுத்து முடிக்க. இவற்றை வகர ஈறாக்கி உகரம் பெற்றன என்று கோடும் எனின் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் பயின்று வரும் வகர ஈறுகளை ஒழித்து ஆசிரியர் 'வகரக்கிளவி நான் மொழி யீற்றது' (எழு. 81) என்றாற்போல வரைந்தோதல் குன்றக் கூறலாம் ஆதலின், அவை உகர ஈறு என்று உணர்க. அவை

---

சு. வே: 1. தான் கெடும்.

* 'அதினை...மருமுடிப்புழிமுடிந்தன' என்றது 'வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்' என்னும் அதிகாரப் புறனடையான் முடிந்தமையை. இதனால் அதன் அதின் எனப் பிற்காலத்து மருவியது என்பது கருத்துப் போலும்—கணேசய்யர்.

செலவு வரவு தரவு உணவு கனவு என வழக்கின் கண்ணும் 'புன்கண் உடைத்தாற் புணர்வு' (குறள் 1152) 'பாடறியா தானை யிரவு' 'கன்னாரக் காணல் கதவு' (முத் தொள். 42) எனச் செய்யுட்கண்ணும் பயின்று வருமாறு உணர்க.

கு.ப்.

சுட்டுமுதல் உகரம் என்ற விடத்து உகரம் என்றாரேனும் உகரத்தை ஈற்றிற் கொண்ட சொல்லைக் கொள்ளல் வேண்டும். 'கெடும்' என்றதற்கு 'உகரம்' என்றது எழுவாயாகலின், செய்தென் வாய்பாட்டதாகிய 'சிவணி' என்றதைச் 'சிவண' எனத் திரித்தல் வேண்டும்.

வேங்.

'ஒட்டிய' என்றதனால், சுட்டுமுதல் உகரம் அன்றிப் பிற உகரமும் உயிர் வரின் கெடுவன கொள்க', என்று கூறி, கதவு + அழகிது = கதவழகிது என்று உகரம் கெட்டுவருதலைக் காட்டினார் நச்சினார்க்கினியர். பெயர்கள் வேற்றுமை யுருபுகளை ஏற்குமிடத்துப் பெறுஞ் சாரியைகளை விதித்தலே இவ்வியலிற்கூறும் பொருளாகலின், கதவு + அழகிது என்பன போன்ற பொருட்புணர்ச்சித் திரிபினை இவ்வியலில் அமைத்தல் பொருந்தாது.

ஆசிரியர், அது இது உது என்னும் சுட்டுப் பெயர்கட்கு அன்சாரியையினையே விதித்துள்ளார் நச்சினார்க்கினியர், அதினை அதினொடு என்பவற்றை உதாரணமாகக் காட்டுதல் பிற்கால வழக்கை மேற்கொண்டதாகும். அதற்கு என்பது கன்னடத்தில் 'அதற்கெ' (அதக்கே) என்றும், அதனை என்பது தெலுங்கில் 'தானின்' என்றும் வழங்குதலின், இச்சுட்டுப் பெயர்கள் அன்சாரியை பெற்று வழங்குதலே தொன்மை என்பது அறியப்படும்.

ஐகார ஈற்றுக்கு வற்றுச் சாரியை

178. சுட்டுமுத லாகிய [1]வையென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே (5)

ஆ. மொ: இல.

The 'ai' ending having demonstrative as initial may stand joinning 'vaṟṟu'

---

ச. வே: 1. வைய்யென்,

கூ. சு.

(Words which) begin with a demonstrative and end in ai will appropriataly appear having combined with 'varru'

இளம்.

இது, [1] ஐகாரவீற்றுட் சிலமொழிக்கு [2] முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்) சுட்டு முதலாகிய ஐ என் இறுதி-சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகாரஈற்றுச்சொல், வற்றொடு சிவணி நிற்றலும் உரித்து—வற்றுச் சாரியையோடு பொருந்தி [3] அவ்வீற்று ஐகாரம் நிற்றலும் உரித்து; (நில்லாமையும் உரித்து).

உ—ம்: அவையற்றை, அவையற்றொடு; இவையற்றை இவையற்றொடு; உவையற்றை, உவையற்றொடு என ஒட்டுக.

ஐகாரம் கெட்டவழி, நின்ற வகரத்தினை வற்றின் மிசை ஒற்றென்று கெடுத்து அவற்றை, இவற்றை, உவற்றை என ஒட்டுக.

மற்று இம்முடிபு சுட்டுமுதல் வகர ஈற்றொடு ஒத்தமையின் ஈண்டு இது கூறல் மிகைபடக் கூறலாம் பிற எனின், அஃது ஒக்கும்; இவ்வாறு கூறுவன மேலும் உள; [4] அவற்றிற்கெல்லாம், ஆசிரியன் கருத்து அறிந்து கொள்ளப்படும் என்பது.

நச்.

இஃது ஐகார ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

(இ—ள்) சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஈற்றுச் சொல், வற்றுச் சாரியையொடு பொருந்தி நிற்றலும் உரித்து; எ—று.

உம்மையான் வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்றலும் உரித்து; எ—று.

---

சு. வே:

1. ஈற்றுச்
2. முடிவு
3. அவ்வீற்றைகான்
4. இவற்றிற்

உ—ம்: அவையற்றை, அவையற்றொடு; இவையற்றை, இவையற்றொடு; உவையற்றை, உவையற்றொடு என ஒட்டுக. இங்ஙனம் ஐகாரம் நிற்க வற்று வந்துழி 'வஃகான் மெய்கெட' (எழு. 122) என்பதனான் முடிக்க.

இனி உம்மையான் அவையற்றிற்கு அவையற்றின்கண் என நான்காவதும் ஏழாவதும் வற்றும் இன்னும் பெற்று வந்தவாறு காண்க. இனி, ஒன்றென முடித்தல் என்பதனால் பல்லவை நுதலிய அகர ஈற்றிற்கும் இவ்விரண்டு உருபின்கண் வற்றும் இன்னும் கொடுத்துப் பலவற்றிற்கு, பலவற்றின்கண் எனமுடிக்க இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும்.

சுப்.

'சிவணி' என்றதற்குச் 'சுட்டுமுதலாகிய ஐயென் இறுதி' என்றதை எழுவாயாகவும், 'நிற்றலும் உரித்தே' என்றதற்கு 'அவ்வீற்றைகாரம்' என்றதை எழுவாயாகவும் கொண்டு, ''சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல் வற்றுச்சாரியையோடு பொருந்தி, அவ்வீற்றைகாரம் நிற்றலும் உரித்து நில்லாமையும் உரித்து'' எனச் சூத்திரப் பொருள் கூறினர் இளம்பூரணர். பின்னர் 'ஐகாரம் கெட்டவழி...... அவற்றையென ஒட்டுக; மற்று......கொள்ளப்படும் என்பது'' என்றும் கூறினர்.

'சிவணி' என்ற செய்தென் எச்சத்தினை ஐகார வீற்றுச் சொல்லாகிய முதலின் வினையாகவும், நிற்றல் வினையைச் சினையாகிய ஐகாரத்தின் வினையாகவும் கொள்ளுதல் பொருந்தாமையானும், 'அவற்றை' முதலியன இளம்பூரணர் கூறியவாறே 'அவ்' என்ற சொல்லினின்றும் பிறக்கும ஆகலானும் அவர்தம் உரை பொருந்தா தென்க.

இதனை யுணர்ந்துதான் நச்சினார்க்கினியர், ''சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல் வற்றுச்சாரியையோடு பொருந்தி நிற்றலும உரித்து'' எனப் பொருள் கூறினர். ஆயினும் ''உம்மையான் வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்றலும் உரித்து'' என்றனர். சூத்திரப் போக்கை நோக்கின் உமமையான் வற்றுசசாரியை பெறாது நிற்றலும் உரித்து எனக் கூறுதலே சாலும என‌த் தோன்றுகிறது. அவ்வா றாயின் 'அவையிற்று' (பரிபாடல். 2. 10), இவையிற்றுக்கு (S. I. I. Vol. III part II பக். 187) முதலியன எவ்வாறு வரும் எனின் புறனடைச் சூத்திரந்தான் வரும என்க.

வேங்.

'ஐகாரங் கெட்டவழி, நின்ற வகரத்தினை வற்றின் மிசை ஒற்று என்று கெடுத்து, அவற்றை அவற்றொடு......எனஒட்டுக' என்றார் உரையாசிரியர். அவ் இவ் உவ் என்னும் வகர ஈற்றுச் சுட்டுப்பெயரே வற்றுச சாரியை பெற்று, அவற்றை இவற்றை உவற்றை என்று வரும். அது, முன்னர், 'சுட்டு முதல் வகரம்' (உரு. 11) என்னும் சூத்திரத்தான் அறியப்படும். அவை இவை உவை என்னும் ஐகார வீற்றுச் சுட்டுப்பெயர் ஐகாரங்கெட வற்றுச்சாரியை பெறுதல் இன்று; அஃது ஆசிரியர் கருத்துமன்று. அவர்க்குக் கருத்தாயின், முற்சூத்திரத்தில் 'யாவை' என்னும் சொல்லில் 'வை' கெடுதற்குக் கூறுதல்போல அவை இவை உவை என்பனவற்றிலும் ஐகாரம் கெடுதற்கு விதிகூறுவர். அவ்வாறு கூறாமையின், அவர்க்கு அது கருத்தன்றாதல் பெறப்படும்.

†கு. சுந்தரமூர்த்தி

மேல் 123-ஆம் நூற்பாவால் அவை இவை உவை என்பன வற்றுச் சாரியையோடு பொருந்தும்வழி வற்று என்பதிலுள்ள முதல் எழுத்தாகிய வகர உயிர்மெய்யில் வகர ஒற்றுக்கெட அகரம் மட்டுமே நிற்கும் என்றார், ஈண்டு அவை இவை உவை என்பன வற்றுச் சாரியையோடு பொருந்தும் வழி, நிலைமொழி யிலுள்ள ஐகாரம் கெட்டு நிற்றலும், கெடாது நிற்றலும் உரித்து என்றார். எனவே மேல் 123-ஆம் நூற்பாவால் கூறியது வருமொழித் திரிபும், இந்நூற்பா நிலைமொழித் திரிபும் கூறியதாகும். இளம்பூரணர் இந்நூற்பாவிற்குக் கூறும் உரையைத் தழுவி இவ்வேறுபாடு காணலாம்.

எனினும், வற்றொடு சிவணுதல் என்னும் பயனிலைக்குச் 'சுட்டு முதலாகிய ஐயென் இறுதியை' (அவை, இவை, உவை) முதற்கண் எழுவாயாகக் கொண்டவர், பின்னர் 'நிற்றலும் உரித்தே' என்னும் பயனிலைக்கு ஐயென் இறுதியை மட்டும் (அதாவது அவை இவை உவை என்பவற்றின் இறுதியிலுள்ள ஐகாரத்தை மட்டும்) எழுவாயாகக் கொண்டு உரை வகுத்தல் பொருந்துவதன்றாம். இங்ஙனம் கொண்டதால்தான், "அவை,

---

† இவர் கருத்து சுப்பிரமணிய சாஸ்திரியார் கருத்துக்கு விளக்கமாக அமைகின்றது.

இவை, உவை என்பன ஈறு திரியாது நின்று வற்றுச் சாரியையோடு பொருந்தவும் பொருந்தலாம்; அவற்றின் ஈறு கெட்டு அவ், இவ், உவ் என நின்றும் வற்றுச் சாரியையோடு பொருந்தலாம்'' என உரை கொண்டனர். அவ், இவ், உவ், என்பன வற்றுப் பெறுதலை மேல் 184 ஆம் நூற்பாவில் கூறுதலின் இவ்வுரை பொருந்துவதன்றாம்.

இங்ஙனம் உரைப்பின் வழுவாதலை உணர்ந்த நச்சினார்க்கினியர், ''அவை, இவை, உவை என்பன வற்றுச்சாரியையோடு பொருந்தி நிற்றலும் உரித்து; உம்மை யான் வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்ற லும் உரித்து'' என உரை கண்டனர்.

எனினும், நூற்பாவின் அமைப்பை நோக்கும் பொழுது, 'சுட்டு முதலாகிய ஐயென் இறுதி வற்றொடு பொருந்தி நிற்ற லும் உரித்து; உம்மையான் வற்றொடு பொருந்தி நில்லாமையும் உரித்து' என உரை காண்பதே பொருத்தம் உடையதாய்த் தெரிகின்றது.

நிற்றலும் உரித்தே என்பதற்கு நிலைமொழியாகிய அவை இவை, உவை என்பனவற்றிலுள்ள ஐயென் இறுதி நிற்றலும் நில்லாமையும் உரித்தே எனப் பொருள் கண்டதால் தான், ஐகாரம் கெட்டு நின்ற அவ், இவ், உவ் என்பனவும் வற்றுப் பெறுதலை ஈண்டுக் கொள்ள வேண்டியதாயிற்று. இங்ஙனம் கொள்ளின் 184—ஆம் நூற்பா தேவையற்றதாகி விடுகின்றது. ஆயின் ஒரே விதி பெறுதற்கு சரிடங்களில் விதிகூறின் மிகையாகக் கூறுவதாகுமே எனக்கண்ட இளம்பூரணர், அதற்குச் சமாதானம் கூறுவார் போல 'இவ்வாறு கூறுவன மேலும் உள; அவற்றிற்கெல்லாம் ஆசிரியன் கருத்தறிந்து கொள்ளப் படும்' எனக் கூறினர். இவ்வுரையை ஏற்பின் ஆசிரியர் தொல்காப்பியர் பலவிடத்தும் மிகையாகக் கூறல் என்னும் குற்றந்தங்க யாத்துள்ளனர் என்றும், அதற்கு யாதானும் ஓராற்றான் அமைதி கூறிக் கொள்ள வேண்டும் என்றும் கருத்துக் கொள்ளவேண்டி வரும். இங்ஙனம் கொள்ளுதல் பொருந்துவதன்றாகலின், இளம்பூரணர் கருத்தும் பொருந்துவ தன்றாம்.

எனவே அவை, இவை, உவை என்பனவற்றை வேறாகவும், அவ், இவ், உவ் என்பனவற்றை வேறாகவும் கொள்ளுதலே

ஆசிரியர் துணிவாகும் என்றும், இவற்றில் முன்னையதற்கு உரிய முடிவை 123—ஆம் நூற்பாவாலும், இந்நூற்பாவாலும் கூறி, ஏனையதை 183—ஆம் நூற்பாவால் கூறுவதே ஆசிரியர் கருத்து எனவும் துணியப்படும்.

*யாவென் வினாவின் ஐக்கும் வற்றுச் சாரியை.*

**179.** [1]யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
ஆயியல் திரியா தென்மனார் புலவர்
ஆவயின் வகரம் ஐயொடுங் கெடுமே (6)

**ஆ மொ: இல.**

The 'ai' ending of interrogative 'yā' also will not fail to follow the same rule say the learned
·uIthat case 'V' disappears with 'ai'

**க. சு.**

The seholars say
that the ending ai of the interrogative yā, too,
will not fail to observe that rule;
the sound 'V' disappears there with 'ai'

**இளம்.**

இதுவுமது.

(இ—ள்.) யா என் வினாவின் ஐ என் இறுதியும்—யா என்னும் வினாவினையுடைய ஐகார ஈற்றுச் சொல்லும், ஆ இயல்திரியாது என்மனார் புலவர்—மேற்கூறிய சுட்டு முதல் ஐகாரம் போல [2]வற்றுப்பெறும் இயல்பில திரியாது என்று சொல்லுவர் ஆசிரியர்; ஆவயின் வகரம் ஐயொடும் கெடும்—அவ்விடத்து வகரம் [3]ஐகாரத்தோடு கூடக் கெடும்.

---

சு. வே : 1. யாவெனும்
2. வற்றுப் பெற்று மவ்வியல்பிற், வற்றுப்பெறு மவ்வியல்பிற்
3. ஐகாரத்தொடு கூடக்கெடும், ஐகாரத்தொடு கெடும்.

உ—ம்: யாவற்றை, யாவற்றொடு என ஒட்டுக.

வகரம் வற்றின் மிசை ஒற்றென்று கெடுவதனை, ஈண்டுக் கேடோதியவதனால் (134) பிறஐகாரமும் வற்றுப்பெறுதல் கொள்க. *கரியவற்றை, செய்யவற்றை எனவரும்.

நச்.

இதுவுமது.

(இ—ள்.) யாவென்னும் வினாவினையுடைய ஐகார வீற்றுச் சொல்லும், முற்கூறிய சுட்டுமுதல் ஐகாரம் போல் வற்றுப் பெறும் அவ்வியல்பில் திரியாதென்று சொல்லுவர் ஆசிரியர், [1]அவ்வீற்றிடத்து வகரம் ஐகாரத்தோடு கூடக்கெடும்; எ—று

உ—ம்: யாவற்றை, யாவற்றொடு என ஒட்டுக. வகரம் வற்று மிசைஒற்று என்று கெடுவதனைக் கேடு ஓதிய மிகை யானே பிற ஐகாரமும் வற்றுப் பெறுதல் கொள்க கரியவற்றை. கரியவற்றொடு; நெடியவற்றை, நெடியவற்றொடு; குறியவற்றை, குறியவற்றொடு என எல்லாவற்றோடும் ஒட்டுக. இது கருமை நெடுமை குறுமை என்னும் பண்புப் பெயரன்றிக் கரியவை நெடியவை குறியவை எனப் பண்புகொள் பெயராய் நிற்றலின், வகர ஐகாரங் கெடுத்து வற்றுச் சாரியை கொடுத்து முடிக்கப் பட்டன. இவை †ஐம்பாலறியும் பண்பு தொகு மொழி (எழு. 428) அன்மையுணர்க.

சுப்.

'கரியவற்றை' முதலாயின ஐகார ஈற்றுப் பெயரினின்றும் பிறந்ததாக நச்சினார்க்கினியர் கொண்டனர். அவற்றைக் 'கரிய'

---

* கரியவை + வற்று + ஐ = கரியவற்றை, செய்யவை + வற்று + ஐ = செய்யவற்றை.

பா. வே: 1. அவ்விடத்து.

† ஐம்பாலறியும் பண்புதொகு மொழி—'கரும்பார்ப்பான் கரும்பார்ப்பனி, கரும்பார்ப்பார், கருங்குதிரை கருங் குதிரைகள் என வரும். இவற்றுள் கரியனாகிய பார்ப்பான், கரியளாகிய பார்ப்பனி, கரியராகிய பார்ப்பார், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரை கள் என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்பு கொள் பெயர் தொக்கவாறு காண்க. (எழு. 428 நச். உரை)

முதலான அகர ஈற்றுப் பெயரினின்றும் பிறந்ததாகக் கொள்ளுதல் சாலும்*

இச்சூத்திரத்தில் வகரக் கேட்டினைக் கூறாது ஐகாரக் கேட்டினை மாத்திரம் ஆசிரியர் கூறியிருப்பின், வகரக்கேடு "அத்தே வற்றே...ஒற்றுமெய் கெடுதல்"... (எழுத் 1 4) என்ற சூத்திரத்தாற் பெறப்படும். அவ்வாறிருக்க ஏன் ஈண்டு வகரக் கேட்டினை ஆசிரியர் கூறினரெனின், நிலைமொழி மெய்யீறாக இருக்கும்போது அம்மெய்யின் கேட்டினை அச்சூத்திரம் உணர்த்திற்றேயன்றி, உயிரீறாய் இருக்கும்போதும், அவ்வுயிர் கெட எஞ்சி நின்ற மெய்யும் கெடும் என உணர்த்தற்கு அன்று எனக் குறித்தற்கென்க.

நீ என்னும் ஈகார ஈற்றுப் பெயர்க்கு னகரஒற்று

180, நீயென் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்றா கும்மே, (7)

ஆ. மெ: இல.

The noun 'Ni' shortens its long vowel
And the consonant 'n' appears there.

க.சு.

The one noun ni shortens its long base-(vowel)
(and) the consonant sound 'n' appears there.

பி. இ. நூ.

நன்னூல். 247

நீ... நின்... ஆம்

இல. வி. 154

நீ... நின்... ஆம்.

முத்து. 213.

நீஎனும் ஒருபெயர் நின்எனத் திரியும்.

---

* 'சாரியை' என்பதும் சொல் உண்டாகிற்று! அது நிலைமொழியாக நின்று உருபுடன்புணரின் எவ்வாறாகும் என்பதற்காகவே நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் அவ்வாறு கூறினா (சிவ.)

நேமி. 23.

நீபின்... ஒற்றணையும்.

இளம்.

இது, ஈகார ஈற்றுள் ஒருமொழிக்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்.) நீ என் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்—நீ என்னும் ஒருபெயர் நெடிதாகிய முதல் குறுகும்; ஆவயின் னகரம் ஒற்று ஆகும்—[1]அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாகும்.

உ—ம்: நின்னை, நின்னொடு என ஒட்டுக.

ஒரு பெயர் என்றது, [2]'நின்' என்பதும் வேறொரு பெயர் போறலை விலக்கிற்று. பெயர் குறுகும் என்னாது முதல் குறுகும் என்றது, [3]அப்பெயரின் நெட்டெழுத்து நிலையது அக்குறுக்கம் என்றற் கென்பது. நெடுமுதல் என்றது அம்மொழி முதலின் நகரம் குறுகுதலை விலக்கிற்று. ஈண்டு உயிர்மெய் ஒற்றுமை பற்றி நெடியது முதலாயிற்று. சாரியைப் பேறிடை எழுத்துப் பேறு கூறியது, மூன்றாம் உருபின்கண் சாரியை பெற்றே வந்த அதிகாரம் மாற்றி நின்றது.

நச்.

இது ஈகாரஈறு இன்னவாறு புணரும் என்கின்றது.

(இ—ள்.) நீஎன்னும் ஒருபெயர் தன்மேல் நின்ற நெடியதாகிய ஈகாரங் குறுகி இகரமாம், அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாய் நிற்கும்; எ—று.

உ—ம்: நின்னை நின்னொடு நினக்கு எனச் செய்கையறிந்து ஒட்டுக. நினக்கு என்பதற்கு "ஆற னுருபினு நான் கனுருபினு" (எழு. 161) "வல்லெழுத்து முதலிய" (எழு. 114) என்பன கொணர்ந்து முடிக்க. நினதென்பதற்கு 'ஆறனுருபி னகரக் கிளவி' (எழு. 115) என்பதனான் முடிக்க. நின் என்பது வேறொரு

---

சு. வே.

1. அவ்விடத்து னகரம்
2. நின் என்பது மற்றொரு பெயர் பெற்றலை (இத் தொடர் தவறு)
3. அப் பெயர்வரின் நெட்டெழுத்து நிலையதனைக், அப் பெயரின் எழுத்து நிலையது (இவ்விருபாடமும் தவறுடையன).

பெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு ஒருபெயர் என்றார். பெயர் குறுகும் என்னாது முதல் குறுகும் என்றது அப் பெயரின் எழுத்தின்கண்ணது குறுக்கம் என்றற்கு. நெடுமுதல் எனவே நகரம் குறுகுதலை விலக்கிற்று. உயிர்மெய் ஒற்றுமை பற்றி நெடியது முதல் ஆயிற்று. 'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' (எழு. 123) என்றதனை நோக்கி ஒடுவிடத்துச் சாரியை பெற்றே வந்த அதிகாரத்தை மாற்றுதற்குச் சாரியைப் பேற்றிடை எழுத்துப் பேறு கூறினார்.

சிவலிங்கனார்.

நீ என்பதும் நீன் என்பதும் இன்றும் உலகவழக்கில் உள்ளன. நின் என்பது தென்னார்க்காடு மாவட்டம் பண்ணுருட்டி வட்டத்தில் பெருவழக்காகவும் பிற வட்டங்களில் வழக்கின்றியும் காணப்படுகிறது. அதனால் 'நின்' என்ற திரிபுப் பெயர் 'நீன்' என்பதன் திரிபாகவும் கொள்ள இடம் உண்டு. அவ்வாறு கொள்ளலாகாது; நீ என்பதன் திரிபாகவே கொள்ளல் வேண்டும் என்பதையுணர்த்தவே, "ஒரு பெயர் என்றது நின் என்பதும் வேறொரு பெயர் போறலை விலக்கிற்று" என இளம்பூரணர் கூறினர். அவரையே நச்சினார்க்கினியரும் பின்பற்றினர்.

"சாரியைப் பேற்றிடை....மாற்றிநின்றது"—இளம், "உடைமையும் இன்மையும்...எழுத்துப்பேறு கூறினார்"—நச். இத் தொடர்களின் விளக்கம் வருமாறு:

நீ என்பது குறுகி 'நி' என்றாகிப் பின் னகர ஒற்றுப் பெறுகின்றது. இந்த னகர ஒற்று சாரியை என்று கொள்ள வேண்டிவரும். ஏன் எனின் முன்உள்ள நூற்பாக்கள் யாவும் சாரியைப் பேறுகூறின. இதன் பின்உள்ள நூற்பாக்களும் சாரியைப் பேறு கூறுவன. எனவே, இந்நூற்பாவிற் கூறப்பட்ட னகரம் சாரியையாமோ என ஐயுறவு கொள்ளாமைக்காக ஆசிரியர் 'னகரம் சாரியையாகும்' என்னாமல் 'னகரம் ஒற்றாகும்' என்று கூறினார். அதாவது னகரம் ஓர் எழுத்துப் பேறு என்பது கொள்ள வைத்தார். இதனால் ஓர் வினா எழுகிறது. சாரியைப் பேறு கூறிவருபவர் இடையில் எழுத்துப் பேறு கூறுவானேன்?—இது வினா. இதற்கு விடை:

'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' (எழு. 123) என மூன்றாம் வேற்றுமைக்குச் சாரியை உண்மையும் இன்மையு மாகிய இரண்டு நிலைகள் கூறப்பட்டன. உருபியல் முதல் நூற்பாவிலிருந்து இந்நூற்பாவின் முன் நூற்பாவரையிலும் அடுத்து வரும் நூற்பாவிலும் மூன்றாம் வேற்றுமை சாரியை பெற்றே வந்தமை தெரிவிப்பன, பெறாமலும் வரும் என்பதற்கு வேறிடம் இல்லாமையாலும், அகரநிரலில் ஈகார ஈற்றுப் பெயர்க்கு (நீ) உருபுடன் புணரும் விதி கூறியாக வேண்டுமாதலி னாலும் இந்நூற்பாவில் எல்லா உருபுகளும் 'நீ' என்பதுடன் புணரும்போது, சாரியை பெறுதல் இல்லை எனத் தனித்து நூற்பாச் செய்ய வேண்டாமல் 'ஊகார ஒற்றாகும்' என்று எழுத்துப் பேறு கூறு முகத்தான் உணர்த்துவதன்மூலம் மூன்றாம் வேற்றுமை சாரியையின்றியும் வரும் என்பதைக் குறிப்பான் ஈண்டே உணர்த்தினார். அதிகாரம்—தொடர்ச்சி.

'நெடுமுதல்' என்றது அம்மொழி முதலின் நகரம் குறுகுதலை விலக்கிற்று' என்றதற்குச் சுப்பிரமணிய சாஸ்திரியார் "நகரம் குறுகும் என்ற ஐயத்திற்கு இடம் இன்மையால் அவ்வாறு கூறுதல் வேண்டாம்" என்பர். "நகரம் குறுகும் என்பதற்கே இடம் இன்மையான் நெடுமுதல் என்பது நகரம் குறுகுதலை விலக்கிற்று என்ற தொடர் வேண்டுவதின்று" என்று சுந்தரமூர்த்தி கூறுவர்.

உரையாசிரியர் இருவரும் அவ்வாறு எழுதற்குக் காரணம் குறுகுதல் என்பது உயிர்க்கேயாயினும் மகரக் குறுக்கம் என்று ஒன்றிருத்தலின் பிற மெய்க்கும் குறுகும் இயல்பு உண்டோ என்னும் ஐயத்தைப் போக்கவே யாம் என்னலாம் முதல் குறுகும் என்றால் நீ என்பதன் ஈகாரமும் நகர ஒற்றும் ஆகியவற்றுள் நகர ஒற்றே முன்நிற்றலின் அதுவே குறுகும் எனக் கொள்ள நேரிடும். அதனை விலக்கவே நெடுமுதல் குறுகும் என்றார் ஆசிரியர்.

ஓகார ஈற்றுக்கு ஒன் சாரியை

**181.** ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை **(8)**

ஆ. மொ: இல.

The 'ō' endings have the increment 'on'

க. சு.

The empty morph 'on' is appropriate to the ending long 'ō'

பி.இ.நூ.

நன். 248

ஆமா கோ னவ் அணையவும் பெறுமே

இல. வி. 151

*ஆமா கோனவ் வணையவும் பெறுமே

முத்து. 214.

ஒகார இறுதிக்கு ஒன்னே சாரியை.

இளம்

இது, ஒகார ஈறு முடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று

(இ—ள்) ஒகார இறுதிக்குச் சாரியை ஒன்—ஒகார ஈற்றுக்கு இடைவரும் சாரியை ஒன் சாரியை.

உ—ம். கோஒனை†, கோஒனொடு என ஒட்டுக

நச்.

இது ஒகார ஈறு இன்னவாறு புணரும் என்கின்றது.

(இ—ள்) ஒகார ஈற்றிற்று இடைவரும் சாரியை ஒன் சாரியை; எ—று,

உ—ம்: கோஒனை, கோஒனொடு என ஒட்டுக. ஒன்னே என்ற ஏகாரத்தாற் பெரும்பான்மையாக வரும் சாரியை ஒன்னே; சிறு பான்மை இன் சாரியை வரும் என்று கொள்க 'ஒன்றாக நின்ற கோவினை அடர்க்க வந்து' எனவும், கோவினை, கோவினொடு; சோவினை, சோவினொடு; ஓவினை, ஓவினொடு எனவும் வரும். ஓ என்பது மதகுநீர் தாங்கும் பலகை.

---

*(குறிப்பு) நன்னூலாரும் இலக்கண விளக்கம் உடையாரும் ஒன் என்னும் சாரியை கொள்ளாமல் னகர ஒற்றுச் சாரியை கொண்டனர்.

† கோஒனை என்பது கோனை எனப் பிற்கால வழக்காக நிலைத்தது. அதனால் நன்னூலார் ஒன் சாரியை கொண்டிலர்; னகர ஒற்றே சாரியைஎன்றார் அவர். கோவினை என வருவதும் பிற்கால வழக்கே

வேங்.

'ஒன்னே' என்ற ஏகாரத்தால் பெரும்பான்மையாக வரும் சாரியை ஒன்னே, சிறுபான்மையாக இன் சாரியை வரும் என்று கொள்க' என்றார் நச்சினர்க்கினியர். ஆசிரியர்க்கு அது கருத்தாயின், முன்னர்,

'மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை' (உருபி. 13) என்று கூறுபவர், அதனையடுத்து,

இன்னிடை வரூஉம் மொழியுமா ருளவே (உருபி 14) என்று கூறுதல் போன்று, ஈண்டும் கூறுவார். அன்றி 'ஒன்னே' என்ற ஏகாரத்தால் இன் சாரியை வருதல் பெறப்படுமாயின், 'மஃகான் புள்ளி முன் அத்தே சாரியை' என்ற விடத்தும் ஏகாரத்தால் இன் சாரியை வருதல் பெறப்படுமாகலின் 'இன்னிடை...ருளவே' என்று சூத்திரஞ் செய்தது மிகையாகுமன்றே? இவற்றால், நச்சினார்க்கினியர் கூறுமாறு 'இன்' சாரியை வருதல் இச்சூத்திரத்தாற் பெறப்படாமை போதரும். ஓகார வீற்றுக்கும் இன் சாரியை வருமாயின் இவ்வியல் முதற்சூத்திரத்தில் அவ்வீற்றையும் உடன் கூறியிருப்பார். ஆசிரியர் கூறாமையின் இன் சாரியை வருதல் பிற்கால வழக்காகும். இச்சூத்திர விதிப்படி ஒன் சாரியை பெற்றுக் கோஒனை கோஒனொடு என்று வழங்கிய சொல் நெடிற்கு முன் வருங்குறில் கெடுதலாகிய முறைமையின், அவ்வொகரங் கெட்டு, கோனை, கோனொடு என்று வழங்கும். அவ்வாறு வழங்கியது கண்டு நன்னூலார்,

'ஆமா கோனவ் வணையவும் பெறுமே' (நன்) என்று விதித்தார். தொல்காப்பியனார் ஆ மா என்னும் இவ்விரண்டு சொற்களுக்கே னகரப்பேறு விதித்திருப்பது ஈண்டு அறியத்தக்கது.

அகர ஆகார ஈற்றுப் பெயர்க்கு அத்துச் சாரியை.

183. அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு
அத்தொடுஞ் சிவணும் ஏழன் உருபே.[1] (5)

ஆ. மொ: இல.

To the tree denoting nouns which end in 'a' and ā
The seventh case sign joins with 'aththu' also

---

ச. வே: 1 அத்தொடு

கு. சு.

'attu' is also inserted between the words
denoting trees (ending) in a, ā,
and the seventh case morph.

பி. இ. நூ.

முத்து; 215

அ ஆ இறுமரம் அத்தொடு சிவணும்
ஏழன் உருபுவந் தியையுங் காலே.

இளம்.

இது அகர ஆகார ஈற்றுட் சில மொழிக்கு, [1]உருபின்கண் எய்தியதன் மேல் சிறப்பு விதி கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு —[2]அ ஆ என்று சொல்லப்படும் மரத்தை உணர நின்ற பெயர் இயற் [3]சொற்கு, அத்தொடும் சிவணும் ஏழன் உருபு —முன் கூறிய இன்னோடன்றி [4]அத்தோடும் பொருந்தும் ஏழாம் உருபு.

உ-ம்: விளவத்துக்கண், பலாவத்துக்கண் எனவரும்.

நச்.

இஃது அகர ஆகார ஈற்றிற்கு எய்தியதன் மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ-ள்) அ ஆ என்று சொல்லப்படும் மரத்தை உணர்த்து நின்ற பெயராகிய சொல்லிற்கு. ஏழாம் உருபு இன்னோடன்றி அத்தோடும் பொருந்தும்; எ-று

உ-ம்: விளவத்துக்கண், பலாவத்துக்கண் எனவரும்.

'வல்லெழுத்து முதலிய' (எழு. 114) என்பதனான் வல்லெழுத்துக் கொடுத்துத் 'தெற்றென்றற்றே' (எழு. 133)

---

சு. வே;

1. ஓர் உருபின் கண்
2. அ ஆ என்ற ஈற்றுச் சொல்லப்படும் (இது பொருத்தமில்லை)
3. சொல்லிற்கு
4. அத்தொடு பொருந்தும்.

என்பதனான் 'அத்திணகரம் அகரமுனைக்'(எழு. 185) கெடாமைச் செய்கை செய்து முடிக்க.

## மெய்யீறுகள்

ஞ ந மெய்யீற்றுக்கு இன்சாரியை

183. ஞ ந என் புள்ளிக்கு இன்னே சாரியை (10)

ஆ மொ:இல·

The consonants 'ñ' and n, have increment 'in'.

க, சு

The non-vocalized Consonants 'ṅ' and 'n' have the empty-morph 'in'

பி. இ· நூ·

முத்து 216

ஞ ந இறுமொழி இன்னொடு நடைபெறுமே.

**இளம்.**

இது, புள்ளியீற்றுள் ஞகாரவீறும் நகாரவீறும் முடியுமாறு [1]கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) ஞந என் புள்ளிக்கு இன்சாரியை — ஞ ந என்று சொல்லப்படுகின்ற புள்ளியீறுகட்கு வரும் சாரியை இன்சாரியை

உ-ம்: உரிஞினை, உரிஞினொடு; பொருநினை பொருநினொடு என ஒட்டுக.

**நச்.**

இது புள்ளியீற்றுள் ஞகார ஈறும் நகார ஈறும் முடியுமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஞ ந என்று சொல்லப்படுகின்ற புள்ளியீறுகட்கு வரும் சாரியை இன்சாரியை; எ-று

உ-ம்: உரிஞினை, உரிஞினொடு, பொருநினை, பொருநினொடு என ஒட்டுக.

---

க, வே:

1. உணர்த்துதல்.

வகர வீற்றுச் சுட்டுக்கு வற்றுச் சாரியை,

184. சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி யியல்திரி பின்றே (11)

ஆ. மொ: இல.

The 'v' which has demonstratives as initials
Will not fail to have the nature of the word
Which dropped 'ai' and its Consonant (v)

க. சு.

The sound 'v' of the demonstratives as inilials
Will not fail to have the nature of (words)
Which dropped the final 'ai' and (its) consonant.

பி. இ நா.

முத்து. 176
அற்றுறிற் சுட்டு ஐகான் அழிதருமே.

இளம்

இது, வகர ஈறு நான்கனுள்ளும் சுட்டு முதல் வகர வீற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) சுட்டு முதல் வகரம்—சுட்டெழுத்தினை முதலாக வுடைய வகார வீற்றுச்சொல், ஐயும் மெய்யும் கெட்ட இறுதி இயல திரிபு இன்று—ஐகாரமும் அதனாற் பற்றப்பட்ட மெய்யும் கெட்டு வற்றுப் பெற்று முடிந்த சுட்டு முதல் ஐகார வீற்று இயலபில் திரிபின்று வற்றுப் பெற்று முடியும்.

உ-ம்: அவற்றை, அவற்றொடு; இவற்றை, இவற்றொடு; உவற்றை, உவற்றொடு என ஒட்டுக.

நச்.

இது† நான்கு மொழிக்கு ஈறாம் வகர ஈற்று சுட்டு முதல் வகர ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

---

†வகரம் ஈறாகும் நான்கு மொழிகள்: அவ், இவ், உவ், தெவ்.

(இ-ள்) அவ் இவ் உவ் என்னும் சுட்டெழுத்தினை முதலாக வுடைய வகர ஈற்றுச் சொல், ஐகாரமும் ஐகாரத்தான் ஊரப் பட்ட மெய்யும் கெட்டு வற்றுப் பெற்று முடிந்த யாவை (எழு. 178) என்னும் ஐகார ஈற்றுச் சொல்லியல்பில் திரிபின்றி வற்றுப் பெற்று முடியும்: எ—று,

உ·ம்; அவற்றை அவற்றொடு; இவற்றை இவற்றொடு; உவற்றை, உவற்றொடு; என ஒட்டுக.

*சிவ.*

ஐயும் மெய்யும் கெட்ட இறுதி என்பது அவை, இவை, உவை என்பனவற்றைக் குறிக்கும் என்று இளம்பூரணரும், யாவை என்பதைக் குறிக்கும் என்று நச்சினார்க்கினியரும் கொண்டனர். பின்னவர் உரையே பொருந்தும் என்பர் சுப்பிரமணிய சாஸ்திரியார் முதலியோர்.

இளம்பூரணர் கொள்கைப்படி பார்க்கப் போனால் சுட்டு முதல் ஐகார ஈறானது, ஐயும் மெய்யும் கெடும் என்று ஆசிரியர் தொல்காப்பியர் யாண்டேனும் விதித்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது. முன்னர் விதிக்கப்பட்ட விதியுடன்தான் பின்னர் மாட்டேறு கூறலாம். விதிக்காத ஒன்றுடன் மாட்டேறில்லை. தொல்காப்பியர், சுட்டு முதல் ஐகாரம் ஐயும் மெய்யும் கெடும் என யாண்டும் விதிக்கவில்லை. இளம்பூரணர் எழுதியது பொருத்தம் இல்லை. எனினும் ஆய்வுக்குரியதாம்.

நச்சினார்க்கினியர் ஐயும் மெய்யும் கெட்ட இறுதியாவது 'யாவை' என்ற சொல் என்பர். இவர் கூற்று பொருத்தமாகவே உளது. 'யாவை' என்ற சொல் வற்றுப் பெற்று முடியும் என்று கூறவந்த ஆசிரியர் "யாவென் வினாவின்...ஐயொடுங் கெடுமே" (எழு. 179) என்றார். யாவை என்பது வற்றுப் பெறும் என்பதும் அப்போது இறுதி ஐயும் வகரமெய்யும் கெடும் என்பதும் இதில் குறிக்கப்பட்டன. எனவே யாவை + ஐ என்பன யா + வற்று + ஐ என்றாகிப் பின், 'யாவற்றை' என்றாகும் என்பது பெறப் பட்டது. இந்நூற்பாவில் குறிக்கப்பட்ட யாவை என்பது ஐயும் மெய்யும் கெட்ட இறுதியாக இருத்தலின் இந்த 'யாவை' என்பதையே 'ஐயும் மெய்யும் கெட்ட இறுதி' என மாட் டேற்றுக்குக் கூறியதாக நச்சினார்க்கியர் கருதினார். இது பொருத்தமே என்றாலும் சுட்டு முதலாகிய ஐயென் இறுதி

ஐயும் மெய்யும் கெட்டு வற்றொடு வரும் என்பதற்குத் தொல் காப்பிய நூற்பா இல்லாமல் போகின்ற குறை நீக்க முடியாது. சுட்டு முதலாகிய ஐயென் இறுதி அவ்வாறே வரும் என்பதை நச்சினார்க்கினியரும் உடன்படுவர். "வஃகான் மெய்கெட" (எழு. 123) என்ற நூற்பாவின் உரையில்,

> "இன்னும்...அவை இவை உவை யெனநிறுத்திச்
> சுட்டு முதலாகிய ஐயென் இறுதி என்றதனான் வற்றும்
> கொடுத்துவேண்டும் செய்கை செய்க"

என்றெழுதியமையால் அதனை உணரலாம்.

சுட்டுமுதல் வகரம் வற்றுப் பெறும் என்று கூறவந்த விடத்தில் 'யாவை' என்ற வினாப் பெயருடன் மாட்டேற்றுவதை விடச் சுட்டு முதலாகிய ஐயென் இறுதியுடன் மாட்டேற்றுவதே மிகச் சிறக்கும். அவ்வாறெண்ணித்தான் இளம்பூரணர் உரை யெழுதினார்போலும். அதனால்தான், 'சுட்டு முதலாகிய ஐஎன் இறுதி வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே' (178) என்னும் நூற்பாவுக்கு, "சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல் வற்றுச் சாரியையொடு பொருந்தி அவ் வீற்று ஐகாரம் நிற்றலும் உரித்து நில்லாமையும் உரித்து" என உரை எழுதினார். அன்றியும், "ஐகாரம் கெட்டவழி நின்ற வகரத்தினை வற்றின் மிசை ஒற்றென்று கெடுத்து அவற்றை இவற்றை உவற்றை யென ஒட்டுக" எனவும் எழுதினார். இந் நூற்பாவில் நிற்றலும் என்பதிலுள்ள உம்மையையும், தாம், உரைக்கீழ் எழுதியதையும் மனதிற் கொண்டே "ஐயும் மெய்யும் கெட்ட இறுதி" என்பதற்கு 'யாவை' என்பதைக் கொள்ளாமல் (அவை முதலிய) சுட்டு முதலாகிய ஐயென் இறுதியையே கொண்டார். எனவே நச்சினார்கினியர் கூற்றைவிட இளம் பூரணர் கூற்று ஒருவகையில் சிறக்கும் என்றே கொள்ளலாம்.

மாட்டேறு என்பது முற்றிலும் பொருந்துவதாக இருத்தல் வேண்டும் என்பதில்லை; ஒருபுடைச் சேறலாகவும் இருக்கலாம் என்பது உரையாசிரியர் இருவரும் கொண்ட கொள்கை. உதாரணமாக ஒன்று காணலாம். மொழிக்கு ஈறாய மெய்யெல் லாம் புள்ளிபெற்று நிற்கும் என்று கூறவந்த ஆசிரியர், "மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" (எழு. 104) என்றார். அதை யடுத்துக் 'குற்றியலுகரமும் அற்றென மொழிப' (எழு. 105)

என்ற நூற்பாவை அமைத்தார். மாட்டேற்று முறைப்படிப் பின்னதற்கு ''ஈற்றுக் குற்றியலுகரம் மொழியிறுதி மெய்கள் போலப் புள்ளி பெற்று நிற்கும்'' என்றே உரைகூற வேண்டும். அவ்வாறே கூறாமல் ''ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிர் ஏற இடங்கொடுக்கும் என்று கூறுவர் புலவர்'' என உரையெழுதினர் இருவரும். ''இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் புள்ளி பெறாமையின்'' என நச்சினார்க்கினியரும், ''இம்மாட்டேறு ஒரு புடைச் சேறல்'' என இளம்பூரணரும் எழுதினர். எனவே தொல்காப்பியர் மாட்டேற்று நூற்பாக்களை ஒரு புடைச்சேறல் நிலையிலும் அமைப்பர் என இருவரும் கருதினர் எனலாம். அந்நிலையிலேயே சுட்டு முதல் வகரம்; வற்றுப் பெறும் எனக் கூறவந்த ஆசிரியர் 'சுட்டு முதலாகிய ஐயென் இறுதி' என்ற நூற்பாவுடன் மாட்டேற்ற வேண்டி ''ஐயும் மெய்யும் கெட்ட இறுதியியல் திரிபின்றே' என்றார் என்க.

இதுவரையிலும் கூறியவற்றிலிருந்து ஐயும் மெய்யும் கெட்ட இறுதி'' என்று தொல்காப்பியரால் கூறப்பட்டது, சுட்டு முதலாகிய ஐயென் இறுதியே யென இளம்பூரணர் கொண்டதும் பொருந்தும் என்பதும், நச்சினார்க்கினியர் 'யாவை' என்ற வினாப் பெயர் என்றதும் பொருந்துமேனும் சுட்டுமுதல் வகரத்தைச் சுட்டு முதல் ஐகார ஈற்றோடு மாட்டேற்றுவதே சிறக்கும்என்பதும் விளங்கும்.

ஏனை வகர ஈற்றுக்கு இன்சாரியை

185. ஏனை வகரம் [1]இன்னொடு சிவணும் (12)

ஆ மொ: இல.

The other 'v' (ending) will have 'in'

க சு

The remaining sound (S) 'v' will combine with 'in'

பி இ நா·

முத்து 218

ஏனை வகரக் கின்னே சாரியை

---

சு. வே : 1. இன்னொடுஞ்

இளம்.

இது, வகர ஈற்றுள் ஒழிந்த [1]வகரத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்.) ஏனை வகரம் இன்னொடு சிவணும்—ஒழிந்த வகரவீறு இன்சாரியையோடு பொருந்தி முடியும்.

உ—ம் : தெவ்வினை, தெவ்வினொடு என ஒட்டுக.

[2]மற்றுஇது உரிச்சொல் அன்றோ எனின், உரிச்சொல்லே யெனினும் படுத்தல் ஓசையாற் பெயராயிற்றெனக் கொள்க.

நச்.

இஃது எய்தாதது எய்துவித்தது; பெயர்க்கேயன்றி உரிச்சொல் வகரத்திற்கு முடிபு கூறுதலின்.

(இ—ள்.) ஒழிந்த உரிச்சொல் வகரம் இன்சாரியையோடு பொருந்தி முடியும்; எ—று.

உ—ம் : தெவ்வினை, தெவ்வினொடு என ஒட்டுக. இஃது உரிச்சொல்லாயினும் படுத்தலோசையாற் பெயராயிற்று.

பிற குறிப்புகள்

தெவ் என்பது உரிச்சொல். இவ்வதிகாரத்துப் பெயர் வினையல்லனவற்றிற்குக் கருவி செய்யாமையின் இங்கு இது (தெவ்) கூறியது என்னை என்பது வினா. அதற்குவிடை : உரிச்சொல் தனித்து வராது. அதனால் ‘தெவ்’ என்பது ‘ஐ’ முதலிய உருபுடன் சேரும்போது உரிச்சொல் நிலை நீங்கிப் பெயர் நிலையெய்தும்; அப்போது அது படுத்தல் ஓசையாற் கூறப்படும். ஆதலின் இங்கு இலக்கணம் கூறினார் என்பது.

மகர ஈற்றுக்கு அத்துச் சாரியை.

186. மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை. (13)

ஆ மொ இல.

Before the Consonant ‘m’ the increment ‘atthu’ comes

சு. வே: 1 வகரவீற்றிற்கு
2 மற்றிஃது, மற்றீது.

க சு.

After the non-vocalized consonant 'm' comes 'attu' as the empty-morph.

பி. இ. நா.

முத்து. 219. மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை.

இளம்.

இது, மகர ஈறுமுடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்.) மஃகான் புள்ளிமுன் அத்து சாரியை—மகரமாகிய புள்ளியீற்றுச் சொல்முன்வரும் சாரியை அத்துச்சாரியை.

உ—ம் : மரத்தை, மரத்தொடு என வரும்.

நச்.

இது மகர வீறு புணருமாறு கூறுகின்றது.

(இ—ள்.) மகரமாகிய புள்ளியீற்றுச் சொல்முன் வரும் சாரியை அத்துச் சாரியை; எ—று.

உ—ம் : மரத்தை, மரத்தொடு; நுகத்தை, நுகத்தொடு என ஒட்டுக. 'அத்தேவற்றே' (எழு. 133) அத்தின் அகரம்' எழு. 125) என்பனவற்றான் முடிக்க. ‡

சில மகர வீறு இன்சாரியை பெறுதல்.

187. இன்னிடை வருஉம் மொழியுமா ருளவே (14)

ஆ. மொ: இல.

There are words (of 'm' ending) where in 'in' comes between (the case sign and the standing words)

சு. சு.

There are words (ending in 'm') in which 'in' comes between.

---

‡ மரம் + ஐ → மரம் + அத்து + ஐ = மரத்தை. மரம் என்பதன் ஈற்று மகரமெய், 'அத்தேவற்றே ஆயிரு மொழி மேல் ஒற்றுமெய் கெடுதல் தெற்றன் றற்றே' என்னும் விதியால் கெட்டது. (மர + அத்து + ஐ) 'அத்தின் அகரம் அகரமுனையில்லை' என்ற விதிப்படி அத்தின் அகரம் கெட்டது. (மர + த்து + ஐ)

பி. இ நூ.

முத்து. 220. இன்னொடு வருதலும் அதனியல் பாகும்.

இளம்.

இது மகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்) இன் இடை வரும் மொழியும் உள—மகர ஈறு அத்துச் சாரியை ஒழிய இன்சாரியை இடை வந்து முடியும் மொழிகளும் உள.

உ—ம் : உருமினை, உருமினொடு என ஒட்டுக.

நச்.

இது மகர ஈற்றிற் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

(இ—ள்.) மகர ஈற்றுச் சொற்களுள் அத்தேயன்றி இன்சாரியை இடையே வந்து முடியும் சொற்களும் உள; எ—று.

மார் ; அசை

உ—ம் : உருமினை, உருமினொடு, திருமினை, திருமினொடு என ஒட்டுக.

சுப்.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் 'மார்' என்றதை அசையாகக் கூறினர். ஆசைநிலைக்கிளவி (சொல். 271) என்ற சூத்திரத்துள் ஆசிரியரே ஆர் என்றதை அசையாகக் கூறினமை யானும், 'மொழியும் ஆர்' எனப்பிரித்தலே நேரிதாகும்.

மறத்தினானும் (தொல். புறத். 24) என்ற ஆசிரியர் வழக்கான் அத்து இன் இரண்டும் வரல் கூடும்.

சிவ.

'இன் இடைவரும் மொழியும் உள' என்பதற்கு உரையாளர் யாவரும் கூறிய உரையோடு "மகர ஈற்றுச் சொற்களுள் அத்துச் சாரியையோடு இன்சாரியையும் இடைக்கண் வரும் சொற்களும் உள" என்னும் பொருளும் கொண்டு 'மறத்தினானும்' என்பதை

எடுத்துக்காட்டாகத் தரலாம். இது இரட்டுற மொழிதல் என்னும் உத்தி.

நும் என்னும் மகர ஈற்றுப் பெயர்.

188. நும் என் இறுதி இயற்கை யாகும். † (15)

ஆ. மொ: இல.

The ending of 'Num' stands natural.

சு. சு.

The ending of 'Num' has no change.

பி. இ. நூ.

முத்து. 221. நும் அத்து இன்னையும் நோக்கா தாகும்.

இளம்.

இது மகர வீற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்) நும் என் இறுதி இயற்கை ஆகும்—நும் என்னும் மகர ஈறு மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாய் முடியும்.

உ—ம் : நும்வை, நும்மொடு என ஒட்டுக.

நச்.

இது மகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

---

† "பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்—ஒரு சூத்திரத் துட் பயந்த சொற்றொடர் பல பொருட்கு ஏற்றதாயி னும், நல்லது கொள்வார் எனக் கருதி அவ்வாறு செய்தல். நும்மென் இறுதியியற்கையாகும் என்புழி, எழுத்து விகாரம் உடையதனைக் களைந்து, சாரியைக் கண்ணே இயற்கை கோடலும் அதன்பாற்படும். இதனை ஏற்புழிக் கோடல் எனவும், ஒரு புடைச்சேறல் எனவும் சொல்லுப" (தொல். பொருள். 662. பேரா.)

(இ—ள்.) நும் என்னும் மகர ஈறு மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாக முடியும்; எ—று

உ-ம்: நும்மை, நும்மொடு, நுமக்கு, நும்மின், நுமது, நுங்கண் எனவரும்.

நுமக்கு நுமது என்பனவற்றிற்கு 'ஆறனுருபினு நான்கனுருபினு' (எழு. 161) 'நும்மென் இறுதியு மந்நிலை' (எழு. 162) 'வல்லெழுத்து முதலிய' (எழு 114) 'ஆறனுருபினகரக் கிளவி' (எழு. 115) ஏன்பன கொணர்ந்து முடிக்க.

நுங்கண் என்பதற்கு மேலைச் சூத்திரத்து 'மெய்' என்றதனான் மகர ஒற்றுக் கெடுத்து 'வல்லெழுத்து முதலிய' என்பதனான் மெல்லொற்றுக் கொடுக்க. இயற்கையென்றார், சாரியை பெறாமை கருதி.

சுப்.

நும்மை என்ற இடத்து மகரம் இரட்டித்திருக்கச் சூத்திரத்துள் இயற்கை என்ற சொல் எவ்வாறு பொருந்தும் எனின், அச்சொற்குச் 'சாரியை யின்மை' எனப் பொருள் கொளல்வேண்டும் என்க †

இச்சூத்திரத்து இயற்கை என்றாரேனும் 'நுங்கண்' என்றவிடத்து மகரங் கெட்டு ஙகரம் மிகுதற்கு "மேலைச்சூத்திரத்து மெய் என்றதனான் மகர ஒற்றுக் கெடுத்து, 'வல்லெழுத்து முதலிய' என்பதனான் மெல்லொற்றுக் கொடுக்க" எனக் கூறினர் நச்சினார்க்கினியர். இதனை 'வல்லெழுத்து முதலிய' (எழு. 115) என்ற சூத்திரவுரையிற் காண்க.

வேங்.

நுங்கண் என்பதற்கு, முன்வருஞ் சூத்திரத்தில் 'மெய்' (யகரமெய்) என்றதனால், நும் என்பதன் மகரம் கெடுத்து,

---

† இவரைப் பின்பற்றி "நும்மை, நும்மொடு என்பன ஒற்று இரட்டித்தவேனும் அவை சாரியை பெறாமை கருதி இயற்கையாகும் என்றார்" என்பர், சு ந்தரமூர்த்தி. "குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டலும்" (எழு 160.) என்னும் விதி முன்னரே கூறப்பட்டமையின் இது தேவையில்லை.

'வல்லெழுத்து முதலிய......வேண்டும்' (எழு. 114) என்னும் சூத்திரத்தான் மெல்லொற்றுக் கொடுக்க' என்றார் நச்சினார்க்கினியர். ஆசிரியர் இச்சூத்திரத்திற் கூறியது, வேற்றுமையுருபேற்றற்கண் நும் என்னும் சொல் சாரியை பெறாது இயல்பாய் வரும் என்னுந் துணையே. இது நச்சினார்க்கினியர் உரையானும் 'இயற்கை யென்றார், சாரியை பெறாமை கருதி' என்று அவர் எழுதியுள்ள விசேடவுரையானும் அறியலாகும். ஆதலால், உருபேற்றற்கண் வரும் திரிபினை ஈண்டு அமைத்தல் கூடாது. முன்னர், 'மகரவிறுதி' என்று கூறும் சூத்திரத்தான் நும்மின் மகரம் கெடும். நச்சினார்க்கினியர் எழுதியுள்ளவாறே 'வல்லெழுத்து முதலிய வேற்றுமை' (எழு. 114) என்னுஞ் சூத்திரத்தால் மெல்லெழுத்து மிகுவதாகும். ஆதலான் முற் சூத்திரத்தில், யாம் என்பதன் முதலிலுள்ள யகரமெய் கெடுதற்கு விதிகூறுதல் கொண்டு, ஈண்டு நும்மின் மகரம் கெட்டது என்றல் அமைவதன்று.

ஆசிரியர், நும் என்னும் சொல்லே அல்வழியில் நீயிர் எனத் திரியும் என்று முன்னகக் கூறுவாராயினும், அல்வழியில் இயல்பாய் இருக்கும் பெயர்கள் வேற்றுமையுருபேற்கையில் இயல்பாயிருத்தலும் அல்வழியில் திரிதலும் பொருந்தாது என்று எண்ணி, நன்னூலார், அல்வழியில் 'நீர்' என இயல்பாய் இருக்கும் பெயர் வேற்றுமையில் 'நும' என்றாகும் என்று விதிகூறினார். (நன். உரு 8) அஃது இவ்வாசிரியர் கூறியதினினும் அமைதியாகுமாயினும், சொல்லின் இயல்பினை ஆராயுமிடத்து, இவ்விரண்டும் பொருந்துவனவாகத் தோன்றவில்லை. 'நீம்' என்னும் பழைய பெயரே 'நிம்' எனத்திரிந்து, 'நின்' என்பது 'நுன்' என வந்தது போன்று 'நும்' என வந்துளது.

வெள்.

நும் என்பது இயற்கையாகிய மகரவீற்றுச்சொல் என்பதும் (எழு. 325) அஃது அல்வழியில் 'நீயிர்' எனத்திரியும் என்பதும் (எழு. 526) ஆசிரியர் கருத்தாகலின் 'நும்' என் இறுதி என இதனை இயல்பீறாக வைத்து ஓதினார்.

தாம் நாம் யாம் என்னும் மகரவீறுகள்

**189.** தாம்நாம் என்னும் மகர இறுதியும்
யாமென் இறுதியும் அதனோ ரன்ன
[1] ஆ ஏ யாகும் யாமென் இறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை யிரண்டும் நெடுமுதல் குறுகும்; **(16)**

ஆ. மொ: இல.

The 'm' ending of Thām', 'Nām' and
'yām' have the same rule;
'ā' is changed into 'e' in yām-ending.
There the consonant 'y' must disappeare
The other two have the long initial shortened.

சு. சு.

The ending of 'tām' and 'nām' and the ending of 'yām'
are the same as that (i.e. num);
'ā' becomes 'e' in 'yām;'
there the sound 'y' must disappear;
and the other two have the long stem-vowel shortened.

பி. இ. நா.

நன். 247

....தா ம் நாம் முதல் குறுகும்...யாம்
.......................எம்ஆம்

இல.வி. 154

...தாம் நாம் முதல் குறுகும்...யாம்
....எம்...ஆம்

முத்து. 222

தாமும் நாமும் நெடுமுதல் குறுகும்
223 யாம் எம் ஆகும் ஆராயுங் காலே.

---

சு. வே : 2. ஏனைய
1. ஆஎளவாகும் (நச்), ஆஎய்யாகும்.

இளம்.

இது, மகர வீற்றுள் முன்கூறிய முடிவு ஒவ்வாதனவற்றிற்கு முடிவு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) தாம் நாம் என்னும் மகர இறுதியும் யாம் என் இறுதியும் அதன் ஓர் அன்ன— தாம் நாம் என்று சொல்லப்படும் மகர வீறும் யாம் என்னும் மகர வீறும் மேற்கூறிய நும் என்னும் மகர வீறுபோல அத்தும் இன்னும் பெறாது முடிதலையுடையவாம், யாம் என் இறுதி ஆ எ ஆகும்—யாம் என்னும் மகரவீற்று மொழி ஆகாரம் எகாரமாம்; ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்— அவ்விடத்து யகரமாகிய மெய் [1]கெடுதல் வேண்டும்; ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும்—ஒழிந்த இரண்டும் நெடியவாகிய முதல் குறுகி நின்று முடியும்.

உ-ம்: தம்மை, தம்மொடு; நம்மை, நம்மொடு; எம்மை. எம்மொடு என ஒட்டுக.

'ஆவயின் மெய்' என்றதனான், பிறவயின்மெய்யும் கெடும் எனக் கொள்க; தங்கண், நங்கண், எங்கண் என வரும்.

நச்.

இது மகர வீற்றின் முற்கூறிய முடிவு ஒவ்வாதனவற்றிற்கு முடிவு கூறுகின்றது.

(இ-ள்) தாம் நாம் என்று கூறப்படும் மகர வீறும் யாம் என்னும் மகரவீறும் நும் என்னும் மகரவீறுபோல அத்தும் இன்னும் பெறாது முடிதலையுடைய;யாம் என்னும் மகர வீற்றுச் சொல்லின் ஆகாரம் எகரமாம்; அவ்விடத்து நின்ற யகரமாகிய மெய்கெடுதலை விரும்பும் ஆசிரியன்: ஒழிந்த தாம் நாம் என்னும் இரண்டும் நெடிலாகிய முதல் குறுகித் தம் நம் என நிற்கும்; எ—று.

உ-ம்: தம்மை. தம்மொடு; நம்மை, நம்மொடு; எம்மை, எம்மொடு என ஆறு உருபோடும் ஒட்டுக. ஆறனுருபிற்கும் நான்கனுருபிற்கும் கருவியறிந்து முடிக்க.

மெய் என்றதனால் பிறவயின் மெய்யும் கெடுக்க தங்கண் நங்கண், எங்கண் என ஏழன் உருபின்கண் மகரம் கெடுத்து

---

௪. வே: 1 கெடுதலை

'வல்லெழுத்து முதலிய' (எழு.114) என்பதனான் மெல்லெழுத்துக் கொடுக்க.

சுப்.

யாமென் இறுதி என்பதற்கு 'யாமென் மகர இறுதி' எனப் பொருள் கூறல் வேண்டும். மகரம் என்றதை முதலடியிலிருந்து ஈண்டும் கொண்டு வரல் வேண்டும்.

வேங்.

உரையாசிரியர்கள் 'மகர மெய் கெடுதல் வேண்டும் என்றதனான், பிறவயின் மெய்யும் கெடும்' என்று கூறி, தங்கண், நுங்கண் எங்கண் என்பனவற்றை அமைத்தனர். இவற்றை மேலைச் சூத்திரத்தே நுங்கண் என்பதற்குக் கூறியவாறு அமைக்க.

எல்லாம் என்னும் மகர ஈற்றுக்கு வற்றும் உம்மும்

190. *எல்லாம் என்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான (17)

ஆ. மேர: இல.

Before the end of 'Ellam' (when denoting neuter)
The increment 'varru' appears fully;
'um' stands at the end.

க சு.

After the ending of 'ellam'
the empty-morph 'varru' appeares fully
and 'um' has the final position.

பி இ நா

நன், 245.

எல்லாம் என்பது இழிதிணை யாயின்
அற்றோடு உருபின் மேல் உம் உறுமே

---

* வராததனால் வந்தது முடித்தலுக்கு மேற்கோள் (தொல். பொருள். 665. பேரா)

இல. வி. 152.

" " "

முத்து.224.

அற்று எலாம் பெறும் ஆயிடை யும்மை
இறுதியொடு சிவணும் என்மனார் புலவர்.

இளம்.

இது. மகர வீற்றுள் ஒரு மொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்) எல்லாம் என்னும் இறுதி முன்னர்—எல்லாம் என்னும் மகர ஈற்றுச் சொல்லின் முன்பு, வற்று என் சாரியை முற்றத் தோன்றும்—மேற்கூறிய அத்தும் இன்னும் [1]அன்றிவற்று என்னும் சாரியை முடியத் தோன்றி முடியும், உம்மை நிலையும் இறுதியான—உம் என்னும் சாரியை நிலைபெறும் இறுதிக்கண்.

உ—ம்: எல்லாவற்றையும், எல்லாவற்றொடும் என ஒட்டுக, 'முற்ற' என்றதனான், மூன்றாம் உருபின்கண்ணும் நான்காம் உருபின்கண்ணும் ஆறாம் உருபின்கண்ணும் உம்மின் உகரக்கேடு கொள்க.

நச்.

இது மகர ஈற்றுள் ஒன்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

(இ—ள்) எல்லாம் என்னும் மகர ஈற்றுச் சொல் முன்னர் அத்தும் இன்னும் அன்றி வற்றென்னுஞ் சாரியை முடியத் தோன்றி முடியும்; ஆண்டு உம்மென்னும் சாரியை இறுதிக்கண் நிலைபெறும்; எ—று.

மகரம் வற்றின் மிசை ஒற்றெனக் கெடுக்க.

உ—ம்: எல்லாவற்றையும், எல்லாவற்றினும், எல்லாவற்றுக் கண்ணும் எனவரும். 'முற்ற' என்றதனான் ஏனை முற்றுகரத் துக்கும் உம்மின் உகரம் கெடுத்துக் கொள்க. எல்லாவற்றொடும் எல்லாவற்றுக்கும் எல்லாவற்றதும் எனவரும். முற்றுகரமாத லின் ஏறிமுடியா.

---

க. வே: 1. இன்றி.

சுப்.

அடுத்த சூத்திரத்தில் 'உயர்திணையாயின்' எனக் கூறப்பட்டமையின், சண்டு அஃறிணையாகிய எல்லாம் என்றதே கொள்ளப்படும்.

"முற்ற என்றதனால்...உகரக்கேடு கொள்க" என்றனர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் அவ்வாறு கூறுதலோடு அதற்கு, "முற்றுகரமாதலின் ஏறி முடியா" எனக் காரணமும் கூறினர். எல்லாவற்றொடு, எல்லாவற்றிற்கு, எல்லாவற்றது என்ற இடங்களில் ஈற்றெழுத்தைக் குற்றியலுகரமாகக் கொள்ளின் குற்றம் யாது? அவ்வாறு கொள்ளின் 'முற்ற' என்ற சொற்குப் பயன் உரைகாரர்கள் கூறுமாறு கூறவேண்டுவதில்லை. †

---

† உரைகாரர்கள் உம்மின் உகரம் கெடும் என்றதற்கு அமைதியாவது : எல்லாம் + வற்று + ஒடு + உம். இப்படி உள்ள பகுபத உறுப்புகளை உரைகாரர்கள், ஈற்றிலிருந்து புணர்த்தி வருவதை முறையாகக் கொண்டவர்கள் ஆதலின், ஒடு + உம் என்பனவற்றைப் புணர்க்கும்போது 'ஒடு' என்னும் உருபு முற்றுகர ஈறு எனக் கொண்டு அடுத்து வரும் உகர உயிருடன் சேரும்போது முற்றுகரமானது கெடாது நிற்றலின் உம்மின் உகரம் கெடும் எனக் கொண்டனர். இதுவே அமைதி. ஒடு, கு, அது என்னும் உருபுகளின் உகரம் முற்றுகரம். எல்லாம் + வற்று + ஒடு + உம் என்பனவற்றை எல்லாம் என்பதிலிருந்து—அதாவது முதல் மொழியிலிருந்து புணர்ப்பதை முறையாகக் கொண்டு, எல்லாவற்றொடு எனப்புணர்த்து. அதனை உம் என்பதனுடன் புணர்க்கும் போது, 'எல்லாவற்றொடு' என்பது ஒருசொல்லாகி உயிர்த்தொடர்க்குற்றுகர ஈறாக நிற்றலின், உம் என்பதுடன் சேரும் போது குற்றியலுகரம் உயிர் ஏற இடங் கொடுக்குமாதலின் எல்லாவற்றொடும்' என உம்மை கெடாது குற்றியலுகரத்தின் மீதேறி முடிந்தது என்பர் சுப்பிரமணிய சாஸ்திரியார். வேங்கடராசலு ரெட்டியாரும் இக்கருத்தினரே.

உயர்திணையில் எல்லாம் நம் சாரியை பெறுதல்

191: உயர்திணை யாயின் நம்மிடை வருமே (18)

ஆ. மொ: இல.

When denoting the High class
(uyarthiṇai) 'nam' comes between (the word 'Ellam' and the case sings)

க, சு.

If (ellam refers to) the personal class,
'nam' is inserted in between

பி. இ. நூ.

நன். 245.

எல்லாம் என்பது இழிதிணை
......................உம் உறுமே
அன்றேல் நம்இடை அடைந்தற் றாகும்.

இ. வி, 152;

" " "

முத்து 225

உயர்திணை யாயின் நம்மிடை தோன்றும்.

இளம்.

இதுவுமது

(இ—ள்.) உயர்திணையாயின் நம் இடைவரும்—எல்லாம் என்னும் விரவுப்பெயர் அஃறிணைப் பெயரன்றி உயர்திணைப் பெயராய் நிற்குமாயின், நம் இடைவரும் — நம் என்னும் சாரியை இடைவந்து புணரும்.

நிலைமொழி [1]யொற்றும் மேல் 'வற்று மிசை ஒற்று' என்று கெட்டு நின்ற அதிகாரத்தாற் கெடுக்க. இன்னும் [2]அதனானே† [3]உம்முப் பெற்றும், அதன்கண் உகரம் சில உருபின் கண் கெடுதலும் கொள்க.

உ-ம் : எல்லா நம்மையும், எல்லா நம்மொடும் என ஒட்டுக.

நச்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

(இ—ள்.) எல்லாம் என நின்ற மகர ஈற்று விரவுப் பெயர் உயர்திணைப் பெயராம் எனின், நம் என்னும் சாரியை இடை நின்று புணரும் எ—று.

உ-ம்: மகர ஈற்றினை மேல் வற்றின் மிசையொற்றெனக் கெடுத்த அதிகாரத்தாற் கெடுக்க. எல்லாநம்மையும், எல்லா நம்மினினும் எல்லாநங்கணும் என உகரம் பெற்றும், எல்லா நம்மொடும், எல்லா நமக்கும், எல்லா நமதும் என உகரங் கெட்டும் மகரம் நிற்கும். இவற்றிறகு எல்லாரையும் எல்லா ரொடும் என்பது பொருளாக ஒட்டுக. இதற்கு நம்மு வகுத்ததே வேறுபாடு. "ஈறாகு புள்ளி அகரமொடு நிற்றல்" (எழு. 161) நான்காவதற்கும் ஆறாவதற்கும் கொள்க.

சுரு.

'உம்மை நிலையும் இறுதியான' என்பது முதற் சூத்திரத்தி னின்றும் அதிகரித்தது.

யகர ஒற்றின் பின்னர் மெய்களுள் யகர வகரங்களே வரும் என ஆசிரியர் கூறியிருத்தலானும் (எழு. 27, 28) சண்டு 'நம்' விதித்திருத்தலானும் இறுதி மகரத்தின் கேட்டினைக் கொள்க.

---

வ. வே:

1. யொற்று.
2. அதனானும்.
3. உம்முப் பெறுதலும், உம்பெறுமதன்கண்

† அதனானே—வற்றுமிசைஒற்று கெட்டு நின்ற அதிகாரத் தானே. எல்லாநம்மையும் — இதில் உகரம் கெடாதும், எம்லாநம்மொடும்—இதில் உகரம் கெட்டும் வந்தமை காண்க.

இதனை இளம்பூரணர், ''நிலைமொழியொற்றுமேல்......உருபின் கண் கெடுதலும் கொள்க'' என்றனர். அவரோடு உடன் பட்டனர் நச்சினார்க்கினியர். 'உம்மை நிலையும் இறுதியான' என்பது இச்சூத்திரத்தில் அதிகாரித்தது எனின் இவ்வாறு கூற வேண்டுதல் இன்று.

வேங்.

முற்சூத்திரத்தில் உயர்திணைப் படர்க்கையில் 'தம்' என்பது வரும் என்றும், முன்னிலையில் நும் என்பது வரும் என்றும் கூறியவதனானும், ஈண்டு, 'உயர்திணையாயின்' என்றதனானும் இது தன்மைக் கண் நம் என்பது வரும் என்றவாறு. ஆகலின், எல்லாநம்மையும் என்று வரும்.

எல்லாநம்மையும் என்பதற்கு எல்லாரையும் என்பதே பொருள் என்றும், நம்மு வருத்ததே வேறுபாடு என்றும் நச்சினார்க்கினியர் கூறினார். எல்லாரையும் என்பது உயர் திணைப் படர்க்கையைக் குறிப்பதேயன்றித் தன்மையிடத்தைக் குறிப்பதன்று படர்க்கைகண் 'தம்' வரும் என்று விதித்தார் ஆகலானும், தன்மைக்கண் 'நம்' வரும் என்று விதித்தார் ஆகதானும் எல்லா நம்மையும் என்பதற்கும் எல்லாரையும் என்பதற்கும் பொருள் வேறுபாடு உளதாதல் நன்கறியப்படும்.

இனி, இடையே வருகின்ற நம், தம், நும் என்பவற்றைச் சாரியை என்குமோ, பெயர்என்குமோ எனின், மேலைச் சூத்திரங் களால், 'நாம்' என்னும் பெயர் 'நம்' என்றும், 'தாம்' என்னும் பெயர் 'தம்' என்றும் வரும் என்று ஆசிரியரே கூறியுள்ளாராக லின், இவையெல்லாம் பெயர் என்றலே அமையும். அன்றியும், நன்னூலார், 'தம் நம் நும்......பொதுச் சாரியையே' என்றது போல, ஆசிரியர் இவற்றைச் சாரியைகளோடு சேர்த்துக் கூறாமையும் அறியத்தக்கது. "தாம், நாம், நீர் என்னும் மூவிடப் பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் வந்தமையானே தம் நம் நும் என விகாரப்பட்டுத் தமக்கு இனமான மூவிடப் பெயர்களை முறையே சார்ந்து......!'' என்றும் (நன் 215 உரை)"இப்பொதுப் பெயர்களே (தாம் நாம் நீர்) இங்ஙனம் தம் நம் நும் எனக் கூறிய சாரியை இடைச் சொல்லும் ஆயின'' என்றும் (நன், 24 உரை) நன்னூல் விருத்தியுரையாளர் எழுதியிருப்பது ஈண்டைக்கு நோக்கத்தகும். எவ்வாறாயினும் தம் நம் நும் என்பன தாம் நாம் நீம்களின் திரிபே.

**பாவாணர்**

எல்லாம் என்பதில் 'ஆம்' ஈறு தன்மைப்பன்மை யாதலாலும் அது பெற்றுவரும் 'நம்' சாரியை தன்மையிடத்திற்குரியது ஆதலாலும் அடுத்த நூற்பாவில் எல்லாரும், எல்லீரும் என்னும் படர்க்கை முன்னிலைப் பெயர்கள் முறையே தம், நும் என்னும் சாரியை பெறும் என்று கூறியிருப்பதாலும், எல்லாநம்மையும், எல்லாநம்மொடும் என்பவற்றிற்கு நம்மெல்லாரையும் நம் மெல்லாரொடும் என்று தன்மைப் பொருள் கொள்ளாது எல்லா ரையும் எல்லாரொடும் என்று படர்க்கைப் பொருள் கொள்வது பொருந்தாது.

*சிவ.*

நச்சினார்க்கினியர் எல்லாநம்மையும் எல்லாநம்மொடும் என்பனவற்றின் பொருள்களாக எல்லாரையும் எல்லாரொடும் என்பனவற்றைக் கூறினாரேயல்லாமல் அவரெல்லாரையும் அவரெல்லாரொடும் எனக் கூறவில்லை. அதனால் எல்லாரையும் எல்லாரொடும் என அவர் கூறியன நம் எல்லாரையும் நம்எல்லா ரொடும் என்ற பொருளுடையனவே எனக் கொள்ளலாம்.

ஆசிரியர், எல்லாம் என்னும் விரவுப் பெயர்க்கு விதிகூறுங் கால் உயர்திணைக்கு முற்கூறாததால் எல்லாம் என்பது சொல் நிலையில் முதலில் அஃறிணையையே பெரும்பாலும் குறிக்கும் என்னும் கருத்தினாற் போலும்

எல்லாரும்; எல்லீரும்—முடிபு.

192. எல்லாரும் என்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரும் என்னும் முன்னிலை யிறுதியும்
ஒற்றும் உகரமும் கெடும்என மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
உம்மை நிலையும் இறுதி யான
தம்மிடை வரூஉம் படர்க்கை மேன
நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே. (19)

ஆ. மொ: இல.

In the ending of 'Ellam' in the third person and
In the ending of 'Ellirum' in the second person

the consonant and 'U' disappear, say the learned.
'r' consonant must stand
'um' stands at the end of the word
'tham' comes between ('r' and 'um') in the third person
'num' comes between in the second person

க. சு.

In the ending of 'ellarum' which denotes the third person
and of 'ellirum' whicn denotes the second person,
the consonant and the sound 'U' disappear;
so it is said;

the non-vocalized consonant 'r' must remain,
and 'um' stands as final;
'tam' comes in between in the third person
and 'num' comes in between with the words of the second person.

பி இ. நா.

நன். 24

எல்லாரும் எல்லீரும் என்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புள்ளும் உருபின் பின்னர் உம்மே.

இல வி. 153 ,, ,, ,,
முத்து. 226 ,, ,, ,,

இளம்.

இது, மகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

(இ—ள்.) எல்லாரும் என்னும் படர்க்கையிறுதியும்— எல்லாரும் என்று சொல்லப்படும் படர்க்கை யிடத்து மகர ஈற்றுச் சொல்லும், எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும்— எல்லீரும் என்று சொல்லப்படும் முன்னிலையிடத்து மகரவீற்றுச் சொல்லும், ஒற்றும் உகரமும் கெடும் என மொழிப—இவற்றின் மகர ஒற்றும் அதன் முன் நின்ற உகரமும் கெட்டு முடியும் என்று சொல்லுவர், ரகரப்புள்ளி நிற்றல் வேண்டும்— அவ்வுகரங்

கெடுவழி அதனால் ஊரப்பட்ட ரகரப் புள்ளி கெடாது நிற்றல் வேண்டும், இறுதியான உம்மை நிலையும்—அவ்விரு மொழிக் கும் இறுதிக்கண் உம் என்னும் சாரியை [1]நிலைபெறும், படர்க்கைமேன தம் இடைவரும்—[2]படர்க்கையிடத்துத் தம் முச் சாரியை இடைவரும்; முன்னிலை மொழிக்கு நும் இடை வரும்—முன்னிலை மொழிக்கு [3]நும்முச்சாரியை இடைவரும்.

உ—ம் : எல்லார்தம்மையும், எல்லார் தம்மொடும்; எல்லீர் நும்மையும், எல்லீர் நும்மொடும் என ஒட்டுக.

படர்க்கை முன்னிலை என்ற மிகுதியான், மகரவீற்றுத் தன்மைப் பெயரிடைக்கண் நம்முச் சாரியையும், ஈற்றுக்கண் உம்முச் சாரியையும் பெற்று முடிவன கொள்க. கரியே நம்மை யும், கரியே நம்மொடும் என ஒட்டுக.

படர்க்கைப் பெயர் முற்கூறியவதனால், ரகார வீற்றுப் படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் இறுதிக்கண் [6]உம்மொடு தம்முச்சாரியையும், நும்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க. கரியார் தம்மையும், சான்றீர் நும்மையும் என ஒட்டுக. உகரமும் ஒற்றும் என்னாத [4]முறையன்றிய கூற்றினான், அம்மூன்று உருபின்கண் உம்மின் [5]உகரக் கேடு எடுத்தோதியவற்றிற்கும் , இலேசினாற் கொண்டவற்றிற்கும் கொள்க.

நச்.

இது மகர வீற்று உயர்திணைப் பெயர் முடிபுக்கு கூறுகின்றது.

---

க. வே :

1. நிலையும்
2. படர்க்கை மொழியிடத்துத் தம் என்னும் சாரியை
3. நும் என்னும் சாரியை.
4. முறையன்றிக்
5. உகரங் கெடுதல் கொள்க.
6. உம்மொடு என்பது கன்னியப்ப முதலியார் பதிப்பில் இல்லை (இருப்பதே நன்று)

(இ—ள்) எல்லாரும் என்னும் மகரஈற்று உயர்திணைப் படர்க்கைப் பெயரும், எல்லீரும் என்னும் மகரவீற்று உயர்திணை முன்னிலைப் பெயரும், மகர ஒற்றும் அதன் முன் நின்ற உகரமும் கெட்டு முடியும் என்று சொல்லுவர் புலவர்; அவ்வுகரம் ஏறிநின்ற ரகர ஒற்றுக் கெடாது நிற்றலை விரும்பும் ஆசிரியன்; அவ்விரு மொழியிறுதிக்கண்ணும் உம் என்னும் சாரியை நிலைபெறும்; படர்க்கைச் சொலலிடத்துத் தம்முச் சாரியை இடைவரும்; முன்னிலைச் சொற்கு நும்முச் சாரியை இடைவரும்; எ—று.

உ—ம்: எல்லாரீ தம்மையும், எல்லார் தம்மினும், எல்லாரீ தங்கணும் என உகரம் பெற்றும், எல்லார் தம்மொடும், எல்லார் தமக்கும், எல்லார் தமதும் என உகரம் கெட்டும் மகரம் நிற்கும். எல்லீர் நும்மையும், எல்லீர் நும்மினும், எல்லீர் நுங்கணும என உகரம் பெற்றும், எல்லீர் நும்மொடும், எல்லீர் நுமககும், எல்லீர் நுமதும் என உகரம் கெட்டும் மகரம் நிற்கும்.

முன்னர் 'மெய்' (எழு. 168) என்ற இலேசாற் கொண்ட மகரக் கேடு இவற்றிற்கும் மேல் வருவனவற்றிற்கும் கொள்க.

படர்க்கைப் பெயர் முற்கூறியவதனானே ரகர ஈற்றுப் படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் மகர ஈற்றுத் தன்மைப் பெயரும் தம், நும், நம், என்னும் சாரியை இடையே பெற்று இறுதி உம்முச் சாரியையும் பெற்று முடிவன கொள்க. கரியார் தம்மையும் சான்றோர் தம்மையும் எனவும், கரியீர் நும்மையும் சான்றீர் நும்மையும் எனவும், கரியே நம்மையும் இருவே நம்மையும் எனவும் எல்லாவுருபொடும் செய்கையறிந்து ஒட்டுக. உகரமும் ஒற்றும் என்னாததனான் இக்காட்டியவற்றிற் கெல்லாம் மூன்று உருபின்கண்ணும் உம்மின் உகரம் கெடுதல் கொள்க. 'நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி' என்றதனானே தம்முப் பெறாமை வருமலையும் கொள்க. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை (குறள் 582) எனவரும்.

கப்.

"படர்க்கை முன்னிலையென்ற மிகுதியானே மகர ஈற்றுத் தன்மைப் பெயரிடைக்கண் நம்முச்சாரியையும் ஈற்றுக்கண் உம்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க; கரியே நம்மையும்

கரியே நம்மொடும் என ஒட்டுக'' என்றனர் இளம்பூரணர். அவர் கூற்றோடு உடம்பட்டனர் நச்சினார்க்கினியர். இதனைத் தன்னின முடித்தலாலேனும் ஒற்றுமைப் போலியாலேனும் உயர் திணையாயின் நம்மிடை வருமே என்ற சூத்திரத்தின் கீழ்க் கொள்ளின் நலம்.

படர்க்கைப் பெயர் முற்கூறியவதனான் ரகரவீற்றுப் படர்க் கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் இறுதிக்கண் உம்மொடு தம்முச்சாரியையும் நம்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க. ஆரியார் தம்மையும், சான்றீர் நும்மையும் என ஒட்டுக'' என்றனர் இளம்பூரணர். அவ்வாறே கூறினர் நச்சினர்க்கினியரும். அவ் வழக்கெல்லாம் ஒற்றுமைப்போலியான் பிற்காலத்து வந்தன எனக் கொள்ளல் தகும்.

'நிற்றல்வேண்டும் ரகரப் புள்ளி' என்றதனானே தம்முப் பெறாமை வருமவையும் கொள்க! எல்லார்க்கும் எல்லாம் நிகழ் பவை' என வரும் என்றனர் நச்சினார்க்கினியர். இவ்வழக்கு பிற் காலத்தது எனக் கூறுதலே பொருந்தும்.

எல்லாரும், எல்லீரும் இவ் விரண்டையும் ஆசிரியர் பெயரிய லில் உயர்திணைக்கண் படித்திருக்கின்றமையான் நச்சினார்க் கினியர் ஈண்டுப் படர்க்கை, முன்னிலை என்பவற்றிற்கு உயர் திணைப் படர்க்கை உயர்திணை முன்னிலையெனப் பொருள் கூறினர்.

இச்சூத்திரத்துப் படர்க்கை முன்னிலை என்பன மிகுதி எனக் கூறினர் இளம் பூரணர். ''எல்லாருமென்னும் பெயர் நிலைக் கிளவியும், எல்லீரும் என்னும் பெயர் நிலைக்கிளவியும்'' (சொல் 164) என்ற சூத்திரத்து அவற்றை முறையே படர்க்கைக் கிளவி முன்னிலைக் கிளவி என ஆசிரியர் கூறாமையின், ஈண்டுக் கூறுதல் இன்றியாமையாதது என்க ஆகலின் இளம்பூரணர் கூற்றுப் பொருந்தாது†

---

† எல்லாரும் எல்லீரும் என்னும் சொற்களே படர்க்கை முன்னிலை என உணர்த்தி நிற்கப் படர்க்கை முன்னிலை எனக் கூறியன மிகை என்பது இளம்பூரணர் கருத்து; ஆதலின் இம்மறுப்புச் சிறவாது. (சிவ.)

தான் யான்—சாரியை பெறாமை

193. தான்யான் என்னும் ஆயீ ரிறுதியும்
மேன்முப் [1]பெயரொடும் வேறுபா டிலவே (20)

**ஆ. மொ: இல.**

The two endings of 'Thān' and 'yān' are not different (in undergoing changes) from the above three nouns (of 'm' ending).

**க. சு.**

The two endings of 'tān and 'yān' are not different from the three nouns (mentioned) above.

**பி. இ. நூ.**

நன். 247

தான்......முதல் குறுகும் யான்...
......என் ஆம்......

இல.வி. 154 „ „ „

முத்து. 227

தான் முதல்குறுகும் யான்என் ஆகும்

**இளம்.**

இது, னகரவீற்றுட் [1]சிலவற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று

(இ—ள்) தான் யான் என்னும் ஆசர் இறுதியும்—தான் யான் என்று சொல்லப்படும் அவ்விரண்டு னகரவீறும், மேல் முப் பெயரொடும் வேறுபாடு இல—மேல் மகரவீற்றுட் சொல்லப் பட்ட மூன்று [2]பெயரொடும் வேறுபாடின்றித் தான் என்பது நெடுமுதல் குறுகியும் யான் என்பதன்கண் ஆகாரம் எகரமாய் யகரம் [3]கெட்டும் முடியும்.

எ—டு தன்னை, தன்னொடு; என்னை, என்னொடு என ஒட்டுக.

---

க. வே : 1. சிலமொழிக்கு
2. பெயரொடு
3. கெட்டு

நச்.

இது னகர ஈற்றுட் சிலவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

(இ—ள்.) தான் யான் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு னகரஈறும், மேல் மகர ஈற்றுட் கூறிய மூன்று பெயரோடும் வேறுபாடின்றித் தான் என்பது குறுகியும் யான் என்பதன்கண் ஆகாரம் எகரமாய் யகர ஒற்றுக்கெட்டும் முடியும்; எ—று.

உ—ம் : தன்னை, என்னை என எல்லா வுருபொடும் ஒட்டுக. செய்கையறிந்து ஒற்றிரட்டுதல் 'நெடியதன் முன்னர்' என்பதனுள் (எழு. 160) இலேசாற் கொள்க.*

அழன் புழன்—அத்து, இன் பெறுதல்

194. 'அழனே புழனே ஆயிரு மொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத் தோன்றல்
ஒத்தது என்ப உணரு மோரே. (21)

ஆ. மொ: இல.

To those two words 'Aḷan' 'Puḷan'
the joining of 'aththu' and 'in' is
optional which is in accordance with the
Usage' say the learned.

க. சு.

The occurrence of 'attu' and 'in' is optional
with the two words 'aḷaṉ' 'puḷaṉ'
the wise one say that it is in agreement (with the rules or
usage)

---

* 'நெடியதன் முன்னர்' என்னும் நூற்பாவில் 'குறியதன் முன்னர்த்தன் உருபு இரட்டலும்' எனவருவது தனிக் குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும் என்ற விதியாகும். அது இயல்பான சொல்லுக்குரியது. தான் என்பது தன் எனத் திரிந்து தனிக்குறில் முன் ஒற்றாய் இருப்பதும் அவ்விதியே பெறும் என்பது அதன் இலேசாற் கொள்ளப் பெறுவதாம்.

* "அழலும் பிணமும் அழனம் என்ப" (பிங்கலம் 10:71)
"அழனே, குணபம் களேபரம் சவம் பிணம் என வைத்துப் பேசினர் புலவர்" (திவாகரம்)

இளம்.

இதுவுமது.

(இ—ள்.) அழன் புழன் அ இரு மொழிக்கும்—அழன் புழன் ஆகிய அவ்விரு மொழிக்கும், அத்தும் இன்னும் உறழத் தோன்றல் ஒத்தது என்ப உணருமோர்—அத்துச்சாரியையும் இன்சாரியையும் மாறிவரத் தோன்றுதலைப் பொருந்திற்றென்ப உணருவோர்.

உ-ம்; அழத்தை அழத்தொடு; அழனினை அழனினொடு; புழத்தை; புழத்தொடு; புழனினை, புழனினொடு என ஒட்டுக

'தோன்றல்' என்றதனான், எவன் என்றும், என் என்றும் நிறுத்தி, வற்றுக் கொடுத்து வேண்டும் செய்கை செய்து எவற்றை எவற்றொடு எனவும், எற்றை எற்றொடு எனவும் முடிக்க.

'ஒத்தது' என்றதனான், எகின் என நிறுத்தி, [1]அத்தும் இன்னும் கொடுத்துச் செய்கை செய்து எகினத்தை, எகினத்தொடு; எகினினை எகினினொடு எனவும் முடிக்க.

† அத்து முற்கூறியவதனான், அத்துப்பெற்றவழி இனிது இசைக்கும் எனக் கொள்க.

அழன்—பிணம்; புழன்—ஒருசெடி, துளை.

நச்.

இதுவுமது.

(இ—ள்.) அழன் புழன் ஆகிய அவ்விரு மொழிக்கும் அத்துச் சாரியையும் இன்சாரியையும் மாறி வரத் தோன்றுதலைப் பொருந்திற் றென்பர் அறிவோர்; எ—று.

உ—ம்; அழத்தை, அழனினை; புழத்தை, புழனினை எனச் செய்கையறிந்து எல்லா உருபினோடும் ஒட்டுக. னகரத்தை அத்தின்மிசை ஒற்றென்று கெடுத்து 'அத்தினகரம்' (எழு. 125) என்பதனான் முடிக்க. தோன்றல் என்றதனான் 'எவன்' என

பா. வே:

1. இன்னும் அத்தும்.

† 120 ஆம் நூற்பாவில் 'இன்னே வற்றே அத்தே' என இன் முற் கூறப்பட்டிருத்தலின் இவ்வாறு கூறினார்.

நிறுத்தி வற்றுக் கொடுத்து வேண்டும் செய்கை செய்து 'எவற்றை' 'எவற்றொடு' என முடிக்க. எல்லாவுருபினோடும் ஒட்டுக. எற்றை என்புழி நிலை மொழி வகரம் இதனாற் கெடுக்க. இனி,'ஒத்தது' என்றதனால்எகின் என நிறுத்தி அத்தும் இன்னும் கொடுத்துச் செய்கை செய்து எகினத்தை எகினினை என ஒட்டுக. அத்து இனிது இசைத்தலின் முற் கூறினார்.

சுப்.

"'தோன்றல் என்றதனான் எவன் என்றும், என் என்றும் நிறுத்தி வற்றுக் கொடுத்து வேண்டும் செய்கை செய்து எவற்றை எவற்றொடு எவவும், எற்றை எற்றொடு எனவும் முடிக்க" என்றனர் இளம்பூரணர். யாவன் என்றதை "யாவன் யாவள்" (சொல். 162) என்ற சூத்திரத்திற் பெயராகவும், எவன் என்றதை "யாதெவன்" (சொல். 31) என்ற சூத்திரத்தில் முடிக் கும் சொல்லாகவும் ஆசிரியர் படித்திருக்கின்றமையான், எவன் என்றதே பிற்காலத்தே வேற்றுமையுருபு ஏற்றது எனக்கொள்ளல் வேண்டும். யாவை என்றதை ஆசிரியர் பெயரியலில் படித்திருக் கின்றமையின் அதற்கு இரண்டாம் வேற்றுமை யாவற்றை என்றாகும். அஃது பிற்காலத்து யான்—என்னை, யாம்—எம்மை என்பதை நோக்கி ஒற்றுமைப் போலியால் யாவை—எவற்றை என்றாயிருத்தல் வேண்டும். அவ்வாறிருக்க 'எவற்றை' என்றது எவன் என்ற ஒருமைப் பெயரின் இரண்டாம் வேற்றுமையாக எக்காலத்து வழக்கில் வந்தது என்பது ஆராய்தற் பாலது.

வேங்.

'ஒத்தது என்றதனான், எகின் என்னும் சொல்லும் அத்துச் சாரியை,இன்சாரியைகளைப்பெறும்'என்றனர் உரையாளர் இரு வரும்.ஆசிரியர் னகரவீற்றுக்குப்பொதுப்படவிதிக்காமல்,'அழனே புழனே' என்று விதந்து கூறி, 'ஆயிருமொழிக்கும்' எனத்தொகை யும் கொடுத்துள்ளார். ஆகலின், 'எகின்' என்னும் சொல் அத்துச் சாரியையினையும் இன்சாரியையினையும் பெறும் என்றலும், அதனை ஈண்டடக்குதலும் ஆசிரியர்க்குக் கருத்தாகா. 'எகின்' என்பது 'எகினம்' என்று மகரவீறாய் வழங்கிய பின்னரே அத்துச் சாரியை பெறும் ஆகலின்; அது பிற்பட்ட வழக்காகும். 'ஒத்தது' என்றதனால் இவ்விரண்டு சாரியையும் ஒருங்கு வரும் எனலாம்.

இனி, 'தோன்றல்' என்றதனால் எவன், என், என்னும் பெயர்கள் வற்றுச் சாரியையும் பெற்று,எவற்றை,எற்றை என்று

வரும் என்றனர் உரையாளர் இருவரும். 'எவன்' என்பதோர் பெயர் ஆசிரியரால் கொள்ளப் பட்டிலது. 'என்' என்பதோடு 'து' சேர்ந்து 'எற்று' என்றாகிய சொல்லே 'ஐ' உருபுடன் சேர்ந்து 'எற்றை' என்று வந்ததாகலின், ஆண்டு வற்றுச் சாரியையின்று. (யாவன் ' 'யாவன் யாவர் என்னும்' (பெய, 8.) என்று கூறியவழி எவன் என்பதனைக் கூறாமையறிக. எவன் என்னும் பெயர் யாவன் என்பதன் திரிபு.)

ஏழ்—அன் சாரியை பெறுதல்.

195. அன்னென் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப. (24)

ஆ. மேர: இல.

The apearance of 'an' icrement before the ending of 'ēḷ' is quite natural.

க. சு.

They say that the empty-morph 'an' is added naturally after the ending of 'ēḷu'†

பி. இ. நூ.
முத்து. 375.

ஏழென் கிளவி அன்னொடு இவணும்

இளம்.

இது, முகரவீற்று ஒரு மொழிக்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்) அன் என் சாரியை—அன் என்னும் சாரியை, ஏழன் இறுதி முன்னர்—ஏழ் என்னும் சொல்லிறுதியின் முன்னே, தோன்றும் இயற்கைத்து என்ப—தோன்றும் இயல்பினை யுடைத்து என்று சொல்லுவர்.

உ—ம்: ஏழனை, ஏழனொடு என ஒட்டுக.

---

† 'ēlu' என்பது தவறு 'ēl' என்பதே நன்று. நூற்பாவில் 'ஏழன்' என்றிருப்பதைக் காண்க.

சாரியை முற் கூறியவதனான், பிறவும் அன்பெறுவன கொள்க; பூழனை, பூழனொடு; யாழனை, யாழனொடு என ஒட்டுக.

நச்.

இஃது ஏழ்என்னும் எண்ணுப் பெயர் அன் சாரியை பெற்றுப் புணர்க என்றது.

(இ—ள்) அன் என்னும் சாரியை ஏழ் என்னும் எண்ணுப் பெயரின் முன்னே தோன்றும் இயல்பினையுடைத்து என்று கூறுவர் ஆசிரியர் எ—று.

உ—ம்: ஏழனை, ஏழற்கு, ஏழனின் என்க. ஏனை உருபுகளோடும் செய்கையறிந்து ஒட்டுக. சாரியை முற்கூறியவதனான் பிறவும் அன் பெறுவன கொள்க. பூழனை, யாழனை என ஏனையவற்றோடும் ஒட்டுக. மேல் வருகின்ற இன் சாரியையைச் சேரவைத்தமையான் அவையெல்லாம் இன் சாரியை பெற்று வருதலும் கொள்க. ஏழினை, பூழினை, யாழினை எனவரும்.†

வேங்.

சாரியை முற்கூறிய அதனால், பிற பெயர்களும் அன் சாரியை பெறும் என்று, பூழனை, யாழனை என்பன காட்டினர் உரையாசிரியர்கள். ஆசிரியர், 'ழகரவிறுதி' என்னாமல், 'ஏழன் இறுதி' என்று எண்ணுப் பெயர் ஒன்றனையே விதந்து கூறுதவானும், யாழ், பூழ் என்பன எண்ணுப் பெயர் அல்லவாகலானும் அவற்றை யீண்டு அமைத்தல் ஆகாது; இவ்வியலின் சற்றுச் சூத்திரத்தில் அமைத்துக் கொள்ளுதல் தகும். நச்சினார்க்கினியர் மேல் வருகின்ற இன் சாரியையைச் சேரவைத்தமையான் அவையெல்லாம் இன் சாரியை பெற்று வருதலும் கொள்க' என்று

---

† ஏழினை என்பதை இளம்பூரணர் குறிப்பிடாததால் அவர்க்குப்பிற்காலத்தில் இவ்வழக்கு வந்திருக்கச் கூடும். ஏழ் என்ற சொல்லே ஏழு எனவரும். அது எழு எனவும் திரியும். ஆசிரியர் இதனைப் புள்ளியீறுகள் கூறுமிடங்களில் கூறியுள்ளார்.

எழுதி, ஏழினை, பூழினை, யாழினை என்பன காட்டினார். ஆசிரியர், அன் சாரியையே விதிப்பதனானும் முன்னர் பிற எண்ணுப் பெயர்கட்கும் அன் சாரியையே விதிப்பதனானும் அது பொருந்தாது.

### குற்றுகர ஈறுகள்

#### குற்றுகரஈறு—இன்சாரியை பெறுதல்.

196. குற்றிய லுகரத் திறுதி முன்னர்
[1]முற்றத் தோன்றும் இன்னென் சாரியை. (23)

ஆ மொ: இல.

The increment 'in' appears perfectly
before the ending of shortened 'U'

க சு.

The empty-morph 'in' appears completely
after (words) ending in over-short 'U'

பி இ நூ.

முத்து 205.

குற்றிய லுகரக் கின்னே சாரியை

இளம்.

இது, குற்றியலுகர வீற்றுக்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்) குற்றியலுகரத்து இறுதி முன்னர்—குற்றியலுகரமாகிய ஈற்றின் முன்னர் முற்றத் தோன்றும் இன் என்சாரியை—முடியத் தோன்றும் இன் என் சாரியை.

---

சு. வே: 1 முற்றிடத்

(குறிப்பு) அளவுப் பெயர்க்கு இன்வரும் எனக் கூறப்பட்ட தொல்காப்பிய நூற்பாவை முத்து வீரியம் அப்படியே மேற்கொண்டது. இந்நூற்பா பொருட் புணர்ச்சிக்கும் உருபுப் புணர்ச்சிக்கும் பொதுவாக அமைந்தது முத்து வீரியத்தில்.

உ—ம்: வரகினை, வரகினொடு; நாகினை, நாகினொடு என ஒட்டுக.

'முற்ற' என்றதனால், பிற சாரியை பெறுவனவும் கொள்க. †வழக்கத்தாற் பாட்டாராய்ந்தான், கரியதனை, கரியதனொடு என வரும்.

நச்.

இது குற்றுகர ஈற்றுக்கு முடிபு கூறுகின்றது.

(இ—ள்.) குற்றியலுகரமாகிய ஈற்றின் முன்னர், முடியத் தோன்றும் இல் என்னும் சாரியை; எ—று.

உ—ம்: நாகினை, நாகினொடு; வரகினை, வரகினொடு எனவரும். ஏனையவற்றொடும் செய்கையறிந்து ஒட்டுக.

'முற்ற' என்றதனானே பிறசாரியை பெறுவனவும் கொள்க. வழக்கத்தாற் பாட்டாராய்ந்தான் எனவும், கரியதனை எனவும் வரும்.

கும்.

உ-ம்: பகட்டினானும் (புறத். 21)

முற்ற என்றதனால் பிறசாரியைகளையும் வழக்கு நோக்கி உரைகாரர்கள் கொள்ளுகின்றனர் ''முன்னதற்கு'' (அகத். 52) ''விளிகொள்வதன்கண்'' (சொல் 63) போன்ற ஆசிரியர் வழக்கினால் அவற்றைக் கொள்ளல் தகும். ''குற்றியலுகரத்தினே சாரியை'' என்ற சூத்திரம் (எழுத். 168) அளவுப்பெயர், நிறைப் பெயர் என்னும் பெயர் இவை குற்றியலுகர இறுதியாயின் குறையின்முன் இன்சாரியையே வரும் எனக் கூறிற்று. இச் சூத்திரம் குற்றியலுகர விறுதிப் பெயர் வேற்றுமையுருபின் முன்னர் இன்சாரியை பெறும் என்றது.

வேங்.

‡மேல், தொகைமரபில் குற்றியலுகரவீற்று அளவுப்பெயர் நிறைப்பெயர்கட்கு முன் 'குறை' என்னும் சொல் வருமிடத்து

---

† வழக்கத்தால் என்பதில் அத்துச் சாரியையும் கரியதனை என்பதில் அன்சாரியையும் வந்தன.

‡ இது அடுத்துவரும் நூற்பாவுக்கும் சேர்த்து எழுதப் பட்டதாகும்.

'இன்' சாரியை வரும் என்பதுவே 'குற்றியலுகரக் கின்னே சாரியை' (தொகை. 15) என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டது. குற்றியலுகர வீற்று எண்ணுப் பெயர் அன்சாரியை பெறுதல் இவ்வியலில் முன்னர்க் (26.ல்) கூறப்படும். ஆகலின், ஈண்டுக் 'குற்றியலுகரத்திறுதி' என்றது எண்ணுப் பெயர் அல்லாத பிற பெயர்களைக் குறிக்கும். நெடிற்றொடருள் ஒற்று மிகுபவற்றை விலக்காமையின் அவற்றிற்கும் இன்சாரியை வரும்.††

களிற்றினை எனவரும்.

'முற்ற' என்றதனால், 'வழக்கத்தாற் பாட்டாராய்ந்தான்' என அத்துச் சாரியை வரும் என்றும், 'கரியதனை' என அன் சாரியை வரும் என்றும் உரையாளர்கள் கூறினர். 'வழக்கு' என்னும் குற்றியலுகர வீற்றுச் சொல்லே அத்துச் சாரியை பெற்றது என்றல் உறுதிப்படாது. 'வழக்கம்' என்னும் மகர வீற்றுச் சொல்லே அத்துச் சாரியை பெற்றது எனினும் அமையு மாகலின். நோக்கு—நோக்கம், குன்று—குன்றம், நெற்று—நெற்றம் எனக் குற்றுகரவீறு மகர வீறாய் நிற்றல் உண்டன்றே? இனி, 'கரியதனை' என்பது கரிய+அதனை எனப் பிரிக்கப்படு மாகலின், 'அது' என்னும் சுட்டுப் பெயர், 'சுட்டுமுதலுகரம் அன்னொடு சிவணி' (எழுத். 177) என்பதனால் 'அன்' பெற்றது எனலாமன்றே?

சில குற்றுகர ஈறுகள் இரட்டித்தல்.

197. நெட்டெழுத் [1]திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான. (24)

ஆ. மொ: இல.

The consonant doubles after long letter in the words other than those (which have 'in' as increment)

---

†† இக்கருத்து அடுத்துவரும் 'நெட்டெழுத்திம்பர்' (197) என்னும் நூற்பாவுக்குரியது. மற்றையன இந்நூற்பாவுக் குரியன.

க. வே: 1. தும்பர்

கு. சு.

The consonant is doubled after a long vowel; (but) not in words of that type.

பி. இ. நூ.

நன். 183.

நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

இல. வி. 102

" " "

முத்து. 229.

ஒற்று இடைமிகூஉம்குற் றுகரமும் உளவே

392. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமைப் பொருட்கே.

இனம்.

இது, [1]அவற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்குதல் நுதலிற்று.

(இ—ள்.) நெட்டெழுத்து இம்பர் ஒற்று மிகத் தோன்றும்—நெட்டெழுத்தின் பின்னாக [2](இடை) இனஒற்று மிகத் தோன்றும், அப்பால் மொழிகள் அல்வழியான—அக்கூற்று மொழிகள் அல்லாத [3]இடத்தின் கண்ணே.

‡[4]அவ்வீறு இன்சாரியை பெறுவது ஆண்டாயின் பெறாது.

---

க. வே:

1. அவ்வீற்றுட்
2. இடையே
3. இடத்து இதன்கண்ணே
4. அவ்வீற்று, அவற்று.

‡ அவ்வீறு = நெடில்தொடர்சுறு; இன்சாரியை பெறுவது = "குற்றியலுகர......இன் என்சாரியை" (196) என்பதனாற் பெறுவது. ஆண்டாயின்—ஒற்றுமிகத் தோன்றுமிடத்தாயின்.

உ—ம்: யாட்டை, யாட்டொடு; யாற்றை, யாற்றொடு எனவரும்.

அப்பால் மொழிகளாவன க ச த பக்கள். இவை இனஒற்று மிகாதென்று கொள்க.

'தோன்றும்' என்றதனான் உயிர்த்தொடர் மொழியும் இன் பெறாது இனஒற்று மிகுதல் கொள்க. பகட்டை, பகட்டொடு முயிற்றை, முயிற்றொடு எனவரும்.

நச்.

இது அக்குற்றியலுகரங்களுட் சிலவற்றிற்குத் தன் ஒற்று மிகும் என்கின்றது.

(இ—ள்.) நெட்டெழுத்தின் பின்னர் வருகின்ற குற்றுகரங் கட்குத் தன் ஒற்று மிகத் தோன்றாநிற்கும் ஒற்றுமிகத் தோன்றாத கசத பக்கள் ஈறாகிய மொழிகள் அல்லாத இடத்து; எ—று.

எனவே டகார றகாரங்கள் ஈறான சொல்லிடைத் தோன்று மாயிற்று.

உ—ம்: யாட்டை, யாட்டொடு; யாட்டுக்கு, யாட்டின், யாட்டது, யாட்டுக்கண் எனவும், யாற்றை, சோற்றை எனவும் தன்னொற்று மிக்கன. இவை அப்பால் மொழிகள் அல்லாதன.

நாகு, காசு, போது, காபு என்றாற்போல்வன அப்பால் மொழிகள்; அவை இனஒற்று மிகாவாயின.

சுப்

உ—ம். ஆறு + ஆன் = ஆற்றான் (கற்பி 27)
"குறுமையும்" (எழுத்: 50) என்ற சூத்திரத்தான் இவ்விதி யைத் தொடர்மொழிக்குங் கொள்ளல் வேண்டும்.

உ—ம் : பகட்டினானும் (புறத் 21)

அப்பால் மொழிகள் என்றதன் பொருளை "ஒற்றிடை யினமிகா மொழியுமாருளவே, அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே" (எழுத். 413) என்ற சூத்திரம் விளக்கும் அவை நாகு, காசு, போது, காபு, போன்றன என்பது உரைக்களான் விளங்கும்.

பி. கு.

இவ்வாசிரியர் ஒத்த ஒற்றை இனஒற்றென்றும், ஒத்த ஒற்று இரட்டுதலை இனஒற்று மிகுதல் என்றும் கூறினமை காண்க—வெள்ளை வாரணனார்.

இந்நூற்பாவையும் இதன் உரையையும் சேர்த்தே நன்னூலார் இலக்கண விளக்கம் உடையார் ஆகியோர் "நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள், டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே (பொருளே)" என்றனர்.

இரட்டி முடிவன சாரியை பெறாமை.

198. அவைதாம்
இயற்கைய வாகும் செயற்கைய என்ப. (25)

ஆ. மொ: இல.

Those are in the state of being natural

சு. சு.

For those (word,)
are said to remain unchanged
(and occasionally) be changed.

இளம்.

இது, மேற் சாரியை விலக்கப்பட்டவற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்.) அவைதாம்—மேற்சாரியை பெறாவென [1]விலக்கப்பட்ட அவைதாம், இயற்கைய ஆகும் செயற்கைய என்ப—இயல்பாய் முடிதலையுடையவாகும் [2]செய்தியையுடைய என்று சொல்லுவர்.

உ—ம்: யாட்டை, யாட்டொடு; யாற்றை, யாற்றொடு என ஒட்டுக.

---

ச. வே:
1. விலக்கப்பட்டவைதாம்.
2. செய்கையை

[3]'செயற்கைய' என்றதனான் இன ஒற்று மிக்கன சிறுபான்மை இன் பெறுதலும் கொள்க. யாட்டினை, யாட்டினொடு முயிற்றினை, முயிற்றினொடு என வரும்.

நச்.

இஃது எய்தியது விலக்கியது.

(இ—ள்) அங்ஙனம் தன்னொற்று மிகுவனதாம், இன் சாரியை பெறாது இயல்பாக முடியும் செய்தியையுடைய என்று கூறுவர் ஆசிரியர்; எ—று

உ—ம்: முன்னர்க் காட்டியனவே கொள்க.

'செயற்கைய' என்ற மிகையானே உயிர்த் தொடர் மொழிகளில் ஏற்பனவற்றிற்கும் ஒற்று மிகத் தோன்றுதல் கொள்க. முயிற்றை, முயிற்றொடு, முயிற்றுக்கு, முயிற்றின், முயிற்றது, முயிற்றுக்கண் எனவரும். இன்னும் இதனானே யாட்டினை, முயிற்றினை என விலக்கிய இன் பெறுதலும் கொள்க.

கு.ப்.

(பொருள்) அவ்வொற்று மிகும் சொற்கள் சாரியை பெறாது இயல்பாய் நிற்கும் தன்மையன என்பர்.

உ—ம்: "பல்லாற்றானும்" (கற்பு 27) †

"செயற்கைய என்றதனான் இனவொற்றுமிக்கன சிறுபான்மை இன் பெறுதலும் கொள்க." என்றனர் இளம்பூரணர். இவ்வாறு கூறுதற்குக் காரணம் "பகட்டினானும் (புறத். 21) முதலிய ஆசிரியர் வழக்காய் இருத்தல் கூடும். 196, 197 இரண்டு சூத்திரங்களும் ஒன்றுக் கொன்று புறனடையெனக் கொள்ளா விடின் சாரியை வருதல் அவற்றாலே பெறப்படும்.

வேங்.

ஆசிரியர், மேல், 'குற்றிய லுகரத் திறுதி' என்னுஞ் சூத்திரத்தால், குற்றியலுகரம் இன்சாரியை பெறும் என்று விதித்தார்;

---

3- செய்கைய

† பல்லாறு + ஆன் + உம் = பல்லாற்றானும். ஆறு என்பது ஆற்று என ஆகிச் சாரியை பெறாமல் வந்தது.

அடுத்த சூத்திரத்தால் இன் சாரியை பெறாதவற்றை விலக்கினார். விலக்கவே, அவை, வேறு சாரியை பெறுங்கொல் என்று ஐயம் நிகழுமாகலின், அதனை யொழிக்க இச்சூத்திரம் கூறவேண்டுவதாயிற்று.

உரையாசிரியர்கள், 'செயற்கைய என்றதனால், இடையில் ஒற்றுமிகத் தோன்றுபவையும் யாட்டினை, யாட்டினொடு என வரும் 'என்றனர். ஆசிரியர், "நெட்டெழுத்திம்பர் ஒற்று மிகத் தோன்றும், அப்பால் மொழிகள் அல்வழியான" (எழு. 14:) என்று விதந்து கூறி விலக்குதலின், அவை 'இன்' சாரியை பெறும் என்றல் அவர் கருத்தோடு மாறுபடும்.

இனி, இளம்பூரணர், 'உயிர்த்தொடர் மொழியும் இன் பெறாது இன ஒற்று மிகும்' என்று எழுதி, முயிற்றை முயிற்றொடு என்று காட்டினார். ஆசிரியர் 'நெட்டெழுத்திம்பர் ஒற்று மிகத் தோன்றும் அப்பால் மொழிகள் அல்வழி' என்று விதந்து கூறுதலின், ஒற்றுமிகும் நெடிற்றொடர் மட்டுமே சாரியை பெறாதன; மற்றையவெல்லாம் சாரியை பெற்றே வரும். இதனான், கண்டு இளம்பூரணர் உரையும் மேற்கொள்ளத் தக்கதாயில்லை.

குற்றுகர எண்ணுப்பெயர்க்கு அன்சாரியை.

199. எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்*. (26)

ஆ. மொ: இல.

The ending of numeral (which end in shortened 'U') will have 'an'.

க. சு.

The ending of (words denoting) numbers combines with 'an'

பி. இ. நா.

முத்து. 228. எல்லா எண்களும் இன்னொடு சிவணும்

* (குறிப்பு) தொல்காப்பியம் அன்னொடு சிவணும் என்று கூற முத்துவீரியம் இன்னொடு சிவணும் என்பது காணத் தக்கது.

**இளம்.**

இது அவ்வீற்று எண்ணுப் பெயர் முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்—எண்ணுப் பெயர்களினது குற்றுகரவீறு அன்சாரியையொடு பொருந்தும். *

உ-ம்: ஒன்றனை, ஒன்றனொடு; இரண்டனை இரண்டனொடு என ஒட்டுக.

**நச்.**

இது குற்றுகர வீற்று எண்ணுப்பெயர் முடிபு கூறுகின்றது.

(இ—ள்.) எண்ணுப் பெயர்களினது குற்றுகரவீறு அன்சாரியையொடு பொருந்தும் எ—று.

உ—ம்: ஒன்றனை, இரண்டனை என எல்லா எண்ணினையும் எல்லா உருபினொடும் செய்கையறிந்து ஒட்டுக. முன்னர்ச் 'செயற்கைய' என்றதனாலே ஒன்றினை, இரண்டினை என இன்சாரியையும் கொடுக்க.

**சுப்.**

உ—ம்: ஒன்றனை (சொல். 27) இரண்டன் (சொல். 93).

நச்சினார்க்கினியர். "முன்னர்ச் செயற்கைய என்றதனாலே ஒன்றினை, இரண்டினை என இன்சாரியையும் கொடுக்க என்றனர்.

குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை (எழுத். 196)

என்றும்,

எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்

என்றும் ஆசிரியர் கூறியிருக்க இன்சாரியையும் வரும் எனக் கூறுதல் பொருந்தாது. இன்சாரியையும் வரும் எனின், இச் சூத்திரம்.

எண்ணின் இறுதி அன்னொடுஞ் சிவணும்

என்றிருப்பின் நலம். அங்ஙனம் கூறாமையால், ஒன்றினை என இன் வருவது பிற்கால வழக்காய் இருத்தல் கூடும்.

---

* ஏழ் என்னும் எண்ணும் அன்சாரியை பெறும் என்பதை இவ்வியல் 22 ஆம் நூற்பாவாலும், குற்றியலுகரப் புணரியல் 13 ஆம் நூற்பாவாலும் அறிக.

எண்ணின் இறுதி அன்னொடு இவணும் என்ற விடத்துக் குற்றியலுகரத் திறுதியாகிய எண்ணினைக் கொள்ளல் வேண்டும், குற்றியலுகரத்திறுதி என்றது அதிகரித்து வருகின்ற மையின். ஆகலினன்றே ஏழ் என்ற எண் அன் சாரியை பெறும் என "அன்னென் சாரியை ஏழன் இறுதி" (எழுத். 195) என்ற சூத்திரத்திற் றனிமையாகக் கூறினார் ஆசிரியர்.

வேங்.

நச்சினார்க்கினியர் 'மேற்சூத்திரத்தில் 'செயற்கைய' என்ற இலேசானே ஒன்றினை, இரண்டினை என இன்சாரியையும் கொடுக்க' என்றார். ஆசிரியர் அன்சாரியையே விதித்ததனா னும், 'செயற்கைய' என்ற சொல்லினால் 'இன்'சாரியை கோடல் அமையாமையானும் அவர் கூறியது பொருந்தாது.

ஒன்று—பத்து ஆன்பெறுதல்.

200. ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்
எல்லா எண்ணும் சொல்லுங் காலை
ஆனிடை வரினும் மானம் இல்லை
அஃதென் கிளவி ஆவயிற் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே. (27)

ஆ. மொ. இல.

When using all the numbers from one
onwards followed by 'paththu'.
The apperance of ān in the middle is not in appropriate.
'aஃthu' (of 'paஃthu') will disappear leaving 'p' consonant to stand.

க. சு.

when pronouncing all numbers beginning with one, and ending with ten,
there is no harm in 'ān', too, is added in the middle;
if that case the part,aktu (of paktu) is dropped;
the consonant 'p' must be preserved.

பி. இ. நா.

நன். 249

ஒன்று முதலெட் டீறாம் எண்ணூர்
பத்தின் முன் ஆன்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லாம் ஓடும் ஒன்பதும் இற்றே.

இல. வி. 157

ஒன்று முதலெட் டளவாம் எண்ணூர்
பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லாம் ஓடும் ஒன்பதும் இற்றே.

முத்து 230.

ஒன்று முதலெட் டீறாம் எண்கள்
ஊர்ந்து வரும்பத் தானொடு சிவணிப்
பகரவொற் றொழிய மேல் எல்லாம் ஓடும்

231. ஒன்பது ஆனொடும் ஒத்து நடக்கும்.

இளம்.

இதுவும் அது.

(இ—ள்.) ஒன்று முதலாக பத்து‡ ஊர்ந்து வரும் எல்லா எண்ணும்—ஒன்று என்னும் எண்ணுப் பெயர் முதலாகப் பத்து என்னும் எண்ணுப் பெயரால் ஊரப்பட்டு வரும் எல்லா எண்ணுப் [1]பெயர்களும், சொல்லுங்காலை—முடிபு சொல்லுங் காலத்து, ஆன் இடை வரினும் மானம் இல்லை—[2]அவ்வீற்றிற்கு மேற்கூறிய அன்னேயன்றி ஆன்சாரியை இடைவரினும் குற்ற மில்லை, அ வயின் அஃது என் கிளவி கெடும்—அவ் ஆன்சாரியை பெற்றவழி அஃது என்னும் சொல் [3]கெடும், பஃகான் மெய்

---

க. வே: 1. பெயர்களையும்
2. அவற்றிற்கு
3. கெடுவாய்

‡ பத்து என்பதைப் பஃது எனக்கொள்ளல் வேண்டும்; ஏனெனின் பின்னர் அஃது என்கிளவி என வருகின்றமை யின் என்க.

உய்தல் வேண்டும்—அது கெடுவழி அவ்வகரத்தான் ஊரப்பட்ட பகரமாகிய மெய் கெடாது நிற்றலை வேண்டும்.

உ-ம்: ஒருபானை, ஒருபானொடு, ஒருபஃதனை, ஒருபஃதனொடு; இருபானை, இருபானொடு; இருபஃதனை, இருபஃதனொடு எனஒட்டுக.

'சொல்லுங்காலை என்றதனான் ஒன்ப தென்னும் எண்ணுப் பெயரும் ஆன் பெற்று அவ்வீற்றின் அது என்னும் சொற்கெட்டு முடிதல் கொள்க. ஒன்பானை, ஒன்பானொடு எனஒட்டுக.

நச்.

இஃது ஒன்று முதலாக எட்டு இறுதியாக நின்ற குற்றுகர ஈற்று எண்ணுப் பெயர் ஏழினோடும் பத்தென்னும் எண்ணுப் பெயர் வந்து புணர்ந்து ஒன்றாய் நின்ற சொற்கள் சாரியை பெற்றுத் திரியுமாறு கூறுகின்றது.

(இ—ள்.) ஒன்று முதலாக எட்டு ஈறாக நின்ற எண்களின் மேலே, பத்தென்னும் எண்ணுப் பெயர் ஏறி வருகின்ற ஒருபது முதலான எல்லா எண்களையும், முடிபுகூறுங்காலத்து, முற்கூறிய அன் சாரியையே யன்றி ஆன்சாரியை இடையே வரினும் குற்றம் இல்லை; ஆன் சாரியை பெற்றுழிப் பஃது என்னும் எண்ணிடத்து அஃது என்னும் சொல் கெட்டுப்போம்; அவ்வகரத்தான் ஊரப்பட்ட பகரமாகிய ஒற்றுக்கெடாது நிற்றலை ஆசிரியன் விரும்பும்; எ—று.

நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம்
வந்திடை நிலையும் (எழு. 437)

என்பதனான் ஆய்தம் பெற்றது.

உ—ம் :ஒருபஃது இருபஃது. முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எண்பஃது எனக் குற்றியலுகரப் புணரியலுள் விதிக்குமாறே நிறுத்தி, அஃது என்பதனைக் கெடுத்துப் பகர ஒற்றை நிறுத்தி ஆன்சாரியை கொடுத்து ஒருபானை, இருபானை என எல்லா எண்ணொடும் எல்லா உருபினையும் செய்கையறிந்து ஒட்டுக. உம்மை எதிர்மறை யாதலின் ஒருபஃதனை,இருபஃதனை என எல்லாவற்றோடும் ஒட்டுக.

சொல்லுங்காலை என்றதனாற் பத்தூர் கிளவியே யன்றி ஒன்பான் முதனிலை' (எழு. 463) 'ஒன்பாற் கொற்றிடை' (எழு. 465) என்றாற்போல வருவனவற்றின்கண்ணும் பகரத்துள் 'அகரம் பிரித்து அஃது என்பது கெடுத்து ஆன் கொடுக்க.

வேங்.

ப்+ஆன் = பான்

ஆசிரியர், 'அஃதென் கிளவி......கெடுமே' என்று விதி கூறிய தனால், குற்றியலுகரம் உயிர் முதன்மொழி வருமிடத்துக் கெடாது என்றும், கெடுதற்கு ஆசிரியர் விதி கூறிற்றிலர் என்றும் மேற்கூறியது பொருந்தாது. என் எனின், சண்டுக் குற்றுகரம் ஊர்ந்து நின்ற தகரமும் மேல் நின்ற ஆயுதமும் கெடுதலின் அவற்றோடு சேரக் கூறினார். இவ்வாறே,

> எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
> ................................. ......
> குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது. (புணரியல். 26)

என்னும் சூத்திரத்திலும் கூறியுள்ளார். இங்கனம் பிறாண்டும் கூறுதல் காண்க.

யாது, அஃது—இன்சாரியை பெறுதல்

> 201. யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
> ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
> ஆய்தம் கெடுதல் ஆவயி னான (28)

ஆ மொ: இல.

> The ending of 'yāthu' and the demonstratives
> which have āytham, have 'an' joined
> Then the āytham dissappears there.

சு. சு.

The ending of 'yātu' and the endings (of the words) beginning with demonstrative (vowels) (which have) āytham' (in the middle combine with 'aṉ'; there, the āytam disappears.

பி இ நூ

நன். 251

சுட்டின்முன் ஆய்தம் அன்வரிற் கெடுமே

இல வி 156

யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தம் கெடுதல் ஆவயி னான.

† முத்து. 232

ஆய்தச் சுட்டும் யாதும் அன்பெறும்
ஆவயின் ஆய்தம் அழியும் சுட்டே.

425. யாதும் ஆய்தச் சுட்டும் அன்பெறும்
ஆவயின் ஆய்தம் அழியும் சுட்டே.

இளம்.

இதுவும் [1] அக்குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்) யாது என் இறுதியும்—யாது எனவரும் குற்றுகர ஈறும், சுட்டுமுதல் ஆகிய ஆய்த இறுதியும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஆய்தத் தொடர் மொழிக் குற்றுகர ஈறும், அன் ஒடு சிவணும்—அன்சாரியையொடு பொருந்தும்; ஆவயி னான் ஆய்தம் கெடுதல்—அவ்விடத்து ஆய்தம் கெடுக.

உ—ம் : யாதனை; யாதனொடு; †அதனை, அதனொடு; இதனை, இதனொடு; உதனை, உதனொடு என ஒட்டுக.

நச்.

இஃது எண்ணுப் பெயரல்லாத குற்றுகர ஈற்றுட் சில வற்றிற்கு முடிபு கூறுகின்றது.

---

க வே: 1. குற்றுகர

† (குறிப்பு) முத்துவீரிய முதல்நூற்பா உருபு புணர்ச்சிக்கு; இரண்டாவது பொருட்புணர்ச்சிக்கு.

† அது என்பது முற்றுகரம். அது அன்பெறுதற்கு 177ஆம் நூற்பா விதி.

(இ—ள்) யாதென வரும் குற்றுகர ஈறும், சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஆய்தத் தொடர்மொழிக் குற்றுகர ஈறும் அன் சாரியையொடு பொருந்தும்; அவ்விடத்து வந்த ஆய்தம் கெடும்; எ—று.

உ—ம்: யாதனை, யாதனொடு எனவும், அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு எனவும் வரும்.

வேங்.

ஈண்டு 'அஃது' என்னும் சொல்லின் ஆய்தம் கெடுதற்கு விதி கூறியவர், 'யாது' என்பதிலுள்ள குற்றியலுகரம் கெடும் என்னாதது அறிக. இதனானும், 'புள்ளியிற்றுமுன்' என்னும் சூத்திரத்தால், குற்றியலுகரத்தொடு உயிர் ஊர்ந்து நிற்கும் என்று கூறியது வலியுறும்.

திசைப் பெயர்கள் ஏழன் உருபிற் சாரியை பெறாமை.

202. ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி இயற்கையு மாகும்
ஆவயின் இறுதி மெய்யொடுங் கெடுமே.‡ (29)

ஆ. மொ: இல

Before the names of the cardinal points (Directions)
when joining with seventh case sign
Increment word (in) may fit appropriately
There the ending (shortened 'U') disappears with its consonant.

க. சு.

words (denoting) direction
when followed by the seventh-case marker,
will not optionally take the empty-morph (in);
there the ending with the consonant is dropped.

‡ "குணக்கின்கண் வாயில் எனச் சாரியை பெறாதும் பெற்றும் அமையும்; என்னை?" ஏழனுருபிற்குத்...... இயற்கையுமாகும் "என்றாராகலின்"—அடியார்க்கு நல்லார் (சிலப். பதிகம் உரை)

பி. இ. நூ.

முத்து. 233.

திசைப்பெயர் முன்வரும் ஏழன் உருபிற்கு
இன்னென் சாரியை இன்றியும் இயலும்.

இளம்

இதுவும் குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு ஏழாம் உருபோடு முடிவு கூறுதல் நுதலிற்று.

(இ—ள்.) ஏழன் உருபிற்கு—ஏழாம் வேற்றுமைக்கு, திசைப் பெயர் முன்னர்—[1]திசையை யுணர நின்ற பெயர்களின் முன்னர், சாரியைக்கிளவி இயற்கையும் ஆகும்—இவ்வீற்றிற்கு முன் (196) கூறிய [2]இன்சாரியையாகிய சொல் நின்று முடிதலே யன்றி நில்லாது இயல்பாயும் முடியும்; ஆவயின் இறுதி மெய் யொடும் கெடும்—இயல்பாயவழிப் பெயர் இறுதிக் குற்றுகரம் தன்னால் ஊரப்பட்ட மெய்யொடும் கெடும்.

உ—ம் : வடக்கின்கண், கிழக்கின்கண், தெற்கின்கண், மேற்கின்கண் எனவும், வடக்கண், கிழக்கண், தெற்கண், மேற்கண் எனவும் வரும்.

உருபு முற்கூறியவதனான், கீழ்சார், கீழ்புடை; மேல்சார், மேல்புடை: தென்சார், தென்புடை; வடசார், வடபுடை என இவ்வாறு சாரியை பெறாது திரிந்து முடிவனவெல்லாங் கொள்க.

நச்.

இதுவும் குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு ஏழனுருபோடு முடிபு கூறுகின்றது.

(இ—ள்.) திசைப் பெயர்களின் முன்னர் வந்த கண் என்னும் உருபிற்கு முடிபு கூறுங்கால், முன் கூறிய இன் சாரியையாகிய சொல் நின்று முடிதலே யன்றி நில்லாது இயல்பாயும் முடியும்; அங்ஙனம் இயல்பாயவழித் திசைப்பெயர் இறுதிக் குற்றுகரந் தன்னான் ஊரப்பட்ட மெய்யொடும் கெடும்; எ—று.

---

க. வே :

1. திசை தன்னையுணர நின்ற, திசையை உணர்கின்ற
2. இன் நின்று முடிதலே யன்றி

உ—ம் : வடக்கின்கண், கிழக்கின்கண், தெற்கின்கண், மேற்கின்கண் எனவும், வடக்கண், கிழக்கண், தெற்கண், மேற்கண் எனவும் வரும். இன்பெறுவழி உகரம் கெடாதென்று உணர்க.

ஆவயின் என்றதனாற் கீழ்சார், கீழ்புடை; மேல்சார், மேல்புடை; தென்சார், தென்புடை; வடசார், வடபுடை எனச் சாரியையின்றிப் பல விகாரப்பட்டு நிற்பனவும் கொள்க. இன்னும் இதனானே கீழைக் குளம், மேலைக்குளம், கீழைச்சேரி, மேலைச்சேரி என ஐகாரம் பெறுதலும் கொள்க.

கப்.

(பொருள் :)திசைப் பெயரின் பின்னர் ஏழாம் வேற்றுமை யுருபுவரின் சாரியை இயல்பாகவும் இருக்கும்; அவ்விடத்துக் குற்றிய லுகரத்திறுதி அதன் பற்றுக் கோட்டுடன் கெடும்.

உ—ம் : வடக்கு + கண் = வடக்கண்.
உம்மையான் இன்சாரியை வரும்
உ—ம் : வடக்கின் கண்.

"உருபு மற்கூறியவதனால் கீழ்சார்...வடபுடை என இவ்வாறு சாரியை பெறாது திரிந்து முடிவன வெல்லாங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். ஆங்கு, சார், புடை முதலிய வற்றைப் பெயராகக் கொள்ளுதல் குற்றம் இன்றாதலின் அவர் தங் கூற்று ஆராய்தற் பாலது.

"இன்பெறுவழி உகரங் கெடாதென்றுணர்க" என்றனர் நச்சினார்க்கினியர். உகரம் என்றதற்குப் பற்றுக்கோடுடனுள்ள குற்றிய லுகரம் என்பது பொருள் போலும்.

வேங்.

சாரியை வாராவழி, குடக்கு குணக்கு முதலிய வற்றில் குற்றிய லுகரம், தான் ஊர்ந்து நின்ற மெய்யொடுங் கெடுதலின், 'இறுதி மெய்யொடுங் கெடுமே' என்று விதி கூறினார். 'எப்பெயர் முன்னரும்' என்னுஞ் சூத்திரத்திற் போல. குற்றிய லுகரம் ஊர்ந்து நின்ற மெய் கெடுமிடத்தே அக்குற்றிய லுகரம் கெடும் என்று கூறுதல் இதனானும் அறியலாகும்.

திசைப் பெயர்களின் முன் வரும் 'கண்' உருபினையே ஏழனுருபு என்று குறித்தாராகலானும், சார் புடை என்பன உருபல்ல வாகலானும், வடசார் வடபுடை என்பன காட்டுதல் அமையாது.

திசைப் பெயர்க்கு முன் ஏழனுருபு வந்து புணர்தற்கே விதி கூறினாராகலானும், இஃது உருபியலாகலானும், கிழக்குளம் கிழைச்சேரி என்று பொருட் புணர்ச்சியில் வருதலை நச்சினார்க் கினியர் சண்டு அமைத்தது பொருந்தாது.

## புறனடை

### இவ்வியலுக்குப் புறனடை

203. * புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய வெல்லாம்
தேருங் காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையும் கடப்பா டிலவே (30)

ஆ. மொ: இல.

The consonant ending and the vowel ending
other than those which are mentioned here
when we examine, have the case sign joined
without having the incerments necessarily

க. சு.

All words, ending in non-voealized consonants
or vowels other then those mentioned (above),
when combined with case-markers will—
on exomining (them)—
take the empty-morph, but not necessarily.

பி. இ. நூ.

நன். 253.

இதற்கிது சாரியை எனின் அள வின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை

* இந்நூற்பா இடையின எதுகைக்கு மேற்கோள் (தொல். செய் 94 பேராசிரியர்.

நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்ற வுணர்த்தல் உரவோர் நெறியே.

இளம்.

இது இவ்வோத்திற் கெல்லாம் [1]புறனடை கூறுதல் நுதலிற்று.

(இ—ள்.) புள்ளி இறுதியும் உயிர் இறு கிளவியும் சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்—புள்ளியீற்றுச் சொல்லும் உயிர் ஈற்றுச் சொல்லும் என [2]முடிபு சொல்லியவை அல்லாத [3]ஒழிந்தவை யெல்லாம், தேருங்காலை—ஆராயுங் காலத்து, உருபொடு சிவணி சாரியை நிலையும் கடப்பாடு இல—உருபு களொடு பொருந்தி இன்சாரியை நின்று முடியும் முறைமையை யுடைய வல்ல (நின்றும் நில்லாதும் முடியும்)

புள்ளியீற்றுள் ஒழிந்தன ஐந்து; உயிரீற்றுள் ஒழிந்தது ஒன்று. இவையும் எடுத்தோதிய ஈற்றுள் ஒழிந்தனவும் எல்லாம் ஈண்டுக் கொள்ளப்படும்.

உ—ம்: மண்ணினை, மண்ணை; வேயினை, வேயை. நாரினை, நாரை; கல்லினை, கல்லை; முள்ளினை, முள்ளை எனவும், கிளியினை, கிளியை எனவும், பொன்னினை, பொன்னை எனவும், தாழினை, தாழை; தீயினை, தீயை; கழையினை, கழையை எனவும் ஒட்டுக.

புள்ளியீற்றுள் ஒழிந்தன பலவாகலின் அது முற்கூறப்பட்டது 'தேருங்காலை' என்றதனால், உருபுகள் நிலை மொழியாக நின்று தம் பொருளொடு புணரும் வழி முடியும் முடிபு வேற்றுமை யெல்லாம் கொள்க.

மண்ணினைக் கொணர்ந்தான், நம்பியைக் கொணர்ந்தான், சொற்றனைக் கொணர்ந்தான், மலையொடு [4]பொருதது, மரத்தாற் புடைத்தான், மரத்துக்கண் [5]கட்டினான் எனவும் ஒட்டுக.

---

க. வே:

1. புறநடை
2. முன்பு
3. ஒழிந்தவெல்லாம்
4. பொருதமால்யானை
5. வெட்டினான்

இஃது உருபியலாகலின், 'உருபொடு சிவணி' என வேண்டா வன்றே? அதனான், உருபு புணர்ச்சிக்கண் சென்ற சாரியைகள் எல்லாம் ஈற்றுப் பொதுமுடிபு உள்வழிப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் செல்லும் என்பது கொள்க. இன்னும் அதனானே, உயிரீறும் [6]மெய்யீறும் சாரியை பெறாது இயல்பாய் முடிவன கொள்க. நம்பியை, கொற்றனை எனவரும்.

நச்.

இஃது இவ்வோத்தினுள் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றிற் கெல்லாம் இதுவே ஒத்தாயதொரு புறனடை கூறுகின்றது.

(இ—ள்.) முற்கூறிய புள்ளியீறும் உயிரீறும் அல்லாத புள்ளி யீற்றுச் சொல்லும் உயிரீற்றுச் சொல்லும், முற்கூறிய ஈறுகள் தம்முள் ஒழிந்து நின்றனவும் எல்லாம், ஆராயுங் காலத்து உருபுகளோடு பொருந்திச் சாரியை நின்று முடியும் முறைமையை யுடைய வல்ல; நின்றும் நில்லாதும் முடியும்; எ—று.

ஏனையவும் என உம்மை விரிக்க. கூறாத புள்ளியீறுகள் ஐந்து. அவை ணகர யகர ரகர லகர ளகரங்களாம். மண்ணினை மண்ணை, வேயினை வேயை, நாரினை நாரை, கல்லினை கல்லை, முள்ளினை முள்ளை என வரும். உயிரீற்றுள் ஒழிந்தது இகரம் ஒன்றுமே †யாதலின் அதனைப் பிற்கூறினார் கிளியினை கிளியை என வரும்.

---

6. புள்ளியீறும்

† இவ்வுருபியலில் 'அ ஆ உ ஊ' (174) என்ற நூற்பாவால் அ ஆ உ ஊ ஏ ஔ என்னும் ஆறீற்று மொழிகளும், 'சுட்டுமுதலாகிய' (178) 'யாவென்வினா' (179) ஆகிய நூற்பாக்களால் ஐகார ஈற்று மொழிகளும், 'நீயென் ஒரு பெயர்'(180) என்ற நூற்பாவால் ஈகார ஈற்று மொழியும் ஆக ஒன்பதீற்று மொழிகள் கூறப்பட்டன. 'எகர ஒகரம் பெயர்க்கீறாகா' (273) என ஆசிரியர் விலக்கிய இரண்டெழுத்துக்கள் நீங்க, இகர ஈறு ஒன்றுமே சொல்லப்படா தொழிந்ததாம் என்க.

இனித் தான் யான் அழன் புழன் என்னும் னகர ஈற்றினும் ஏழ் என்னும் ழகர ஈற்றினும் ஒழிந்தன பொன்னினை பொன்னை, தாழினை தாழை என்றாற் போல வருவனவும் பிறவுமாம். இனி ஈகார ஈற்றுள் ஒழிந்தன தீயினை தீயை ஈயினை ஈயை, வீயினை வீயை என்றாற் போல்வன பிறவும் ஆம். ஐகாரஈற்றுள் ஒழிந்தன திணையினை திணையை, கழையினை கழையை என்றாற் போல்வன பிறவுமாம். ஏனைய ஈறுகளினும் வருவன உணர்ந்து கொள்க.

மேலே பெயரீற்றுச் செய்கை யெல்லாம் தத்தம் ஈற்றின்கண் முடிப்பாராதலின் அவையீண்டுக் கூறல் வேண்டா.

இனித் 'தேருங்காலை' என்றதனானே உருபுகள் நிலைமொழி யாக நின்று தம் பொருளொடு புணருங்வழி வேறுபடும் உருபீற்றுச் செய்கை யெல்லாம் ஈண்டு முடித்துக் கொள்க.

உ-ம்: நம்பியைக் கொணர்ந்தான், மண்ணினைக் கொணர்ந் தான், கொற்றனைக் கொணர்ந்தான் என மூவகைப் பொருளோடும்‡ கூடிநின்ற உருபீற்று ஒற்றுக் கொடுக்க. மனை யொடு பொருதது, மத்திகையாற் புடைத்தான், சாத்தற்குக் கொடுத்தான், ஊர்க்குச் சென்றான், காக்கையிற் கரிது, காக்கையது பலி, மடியுட் பழுக்காய், இடாவினுட் கொண்டான் என்னுந் தொடக்கத்தன உருபு காரணமாகப் பொருளொடு புணருங்வழி †இயல்பாயும் ஈறு திரிந்தும் ஒற்று மிக்கும் வந்தன கொள்க.

இனிக் கண் கால் புறம் முதலியன பெயராயும் உருபாயும் நிற்குமாதலின், அவை உருபாகக் கொள்ளும் வழி வேறுபடும் செய்கைகள் எல்லாம் இவ்விலேசான்முடிக்க. இஃது உருபியலாத லின் "உருபொடு சிவணி" எனவேண்டா அம்மியையானே உருபு புணர்ச்சிக்கட் சென்ற சாரியைகள் எல்லாம் ஈற்றுப் பொருள் முடிபு உவ்வழிப் பொருட்புணர்ச்சிக்கும் கொள்க. விளவின்கோடு, கிளியின்கால் என எல்லா ஈற்றினும் கொள்க. நம்பியை, கொற்றனை என உயிரீறும் புள்ளியீறும் சாரியை பெறாது இயல்பாய் முடிவனவும் ஈண்டே கொள்க.

உருபியல் முற்றும்

---

‡ மூவகைப் பொருள்: உயர்திணை அஃறிணை, விரவுத் திணைப் பொருள்கள்.

† உருபு காரணமாகப் பொருளொடு புணர்தல்: உருபின் பொருள்பட வரும் சொல்லுடன் தொடர்தல்.

சுப்.

"தேருங்காலை என்றதனால் உருபுகள் நிலை மொழியாக நின்று தம் பொருளொடு புணரும்வழி முடியும் முடிபு வேற்றுமையெல்லாம் கொள்க" என்று கூறினர் உரைகாரர்கள். வேற்றுமையுருபேற்ற பெயர்களும் பெயர்களாமாதலின், அவற்றை உயிர்மயங்கியல் புள்ளிமயங்கியல் குற்றியலுகரப் புணரியல் இவற்றுட் கூறப்படும் விதிகளாலே கொள்ளலாம்.

"இஃது உருபியலாகலான் உருபொடு சிவணி என வேண்டா வன்றே; அதனான் உருபுபுணர்ச்சிக்கண் சென்ற சாரியைகள் எல்லாம் ஈற்றுப் பொது முடிபு உள்வழிப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் செல்லும் என்பது கொள்க" என்றனர் உரைகாரர் கள். இடையில் எல்லா உருபும் தொகும் என்பது.

ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள் வயின்
மெய்யுருபு தொகாஅ இறுதி யான (சொல். 105)

என்ற சூத்திரத்தாற் பெறப்படுகின்றமையானும், உருபு முதலில் நின்றே பின்னர்த் தொகும் ஆதலானும், நின்றவழி சாரியை வரும் ஆதலானும், உருபு தொக்கவழி அது காரணமாக வந்த சாரியையும் கெடுமோ என்ற ஐயம் வர, அது கெடவேண்டிய நியதியில்லை என்பதை, 'உருபொடு சிவணி' என்றது குறிக் கின்றது என்பதே அதற்குப் பொருளாகும்.

இச்சூத்திரத்திலும் புள்ளி என்றது மெய்யினையும் குற்றிய லுகரத்தினையும் குறித்தல் நோக்கத்தக்கது.

வேங்.

'சொல்லிய வல்ல ஏனைய வெல்லாம்' ஆவன—உயிரீற்றுள் இகர வீற்றுப் பெயர்களும், நீ என்னும் பெயரொன்று ஒழிந்த எல்லா ஈற்றுப் பெயர்களும், அவை இவை உவை யாவை என்னும் நான்கு சொற்களொழிந்த எல்லா ஐகார வீற்றுப் பெயர்களும், மெய்யீற்றுள் ணகார யகார ரகார லகார ளகார இவ்வைந்தீற்றுப் பெயர்களும், தான் யான் என்னும் இரண்டு பெயர்கள் ஒழிந்த எல்லா னகர ஈற்றுப் பெயர்களும், ஏழ் என்னும் பெயர் ஒன்று ஒழிந்த எல்லா ழகர வீற்றுப் பெயர்களும் இவையெல்லாம் உருபொடு கூடுமிடத்துச் சாரியை பெற்றும் பெறாமலும் வரும்.

அ ஆ உ ஊ ஏ ஓ ஔ இவ்வேழ் உயிரீற்றுப் பெயர்களும், ஞ் ந் ம் வ் இந்நான்கு மெய்யீற்றுப் பெயர்களும், ஒற்றுமிகு நெடிற்றொடர் ஒழிந்த ஏனைத் தொடர்க் குற்றுகர வீற்றுப் பெயர்களும் உருபொடு கூடுமிடத்துச் சாரியை பெற்றே வரும்.

நும், தாம், நாம், யாம் என்னும் மகர வீற்றுப் பெயர்களும், தான் யான் என்னும் னகர வீற்றுப் பெயர்களும், ஒற்று மிகும் நெடிற்றொடர்க் குற்றியலுகர வீற்றுப் பெயர்களும் சாரியை பெறாமல் வரும்.

'உருபொடு சிவணி' என வேண்டா கூறியவதனான் உருபு புணர்ச்சிக்கட் சென்ற சாரியை பொருட் புணர்ச்சிக்கண்ணும் செல்லும் என்றனர் உரையாளர் இருவரும். உருபு புணரச்சிக்கண் செல்லுமாயின் அவற்றை ஆசிரியர் மாட்டெறிந்து கூறுவர். அதுமேலே காட்டப்பட்டுள்ளது.* அவ்வாறு ஆசிரியர் கூறாதன வற்றைக் கொள்ளுதல் அமையாது. 'உருபொடு சிவணி' என்பது தெளிவின் பொருட்டுக் கூறப்பட்டது. இவ்வாறே விளங்குதற் பொருட்டுப் பல இடங்களிலும் கூறப்பட்டுள்ளன காணலாம்.

அகர வீற்று மரப் பெயர்க் இளவி மெல்லெழுத்து மிக்கு முடிதலையே ஆசிரியர் முன்னர் (உயிர். 15) விதிக்கின்றாராக லானும், உருபியலோடு மாட்டெறிந்திலராகலானும், விளவின் கோடு என்று வருதல் அவர்கருத்தன்று. இவ்வாறே பிறவும் காண்க.

உருபியல் உரைவளம் முற்றும்.

---

* சூ. 175 இல் உரையில் காண்க

## பயன் படுத்தப் பெற்ற நூல்கள்


1. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்
   சென்னை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1955
2. தொல்—எழுத்து—இளம்பூரணம்
   திரு. அடிகளாசிரியர் பதிப்பு
   கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர் 1969.
3. தொல்—எழுத்து—குறிப்புரையுடன்
   டாக்டர், பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார்
   பி. க, சாமிநாதன் பதிப்பு. திருவையாறு 1937
4. தொல்—எழுத்து—நச்சினார்க்கினியம்
   சென்னை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
   ஆறாம்பதிப்பு 1972
5. தொல்—எழுத்ததிகார ஆராய்ச்சி
   வே. வேங்கடராஜலு ரெட்டியார்
   சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு 1941.
6. தொல்—எழுத்து—நச்சினார்க்கினியம்
   சி. கணேசய்யர் பதிப்பு, இலங்கை, சுன்னாகம்
   திருமகள் அழுத்தகம் வெளியீடு 1952.
7. தொல்—எழுத்து—நச்சினார்க்கினியம்
   தஞ்சை, சரசுவதிமகால் வெளியீடு 1957.
8. தொல்காப்பியம்—நன்னூல்—எழுத்ததிகாரம்
   க. வெள்ளைவாரணன்
   அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
   அண்ணாமலை நகர் 1962
9. இலக்கணத்தொகை—எழுத்து
   டாக்டர், உ. வே. சுப்பிரமணியன் பதிப்பு
   விற்பனை உரிமை பாரிநிலையம், சென்னை. 1967
10. Tolkappiyam in English with critical studies. Kural Neri publishing house, Madurai 1963.
11. Journal of Tamil studies (December 1972)
    Inter national institute of Tamil studies Madras 113.

# சொல்லகராதி

(எண்—பக்க எண்)

# சூத்திர முதற்குறிப்பகராதி

(எண்—பக்க எண்)

# நுண் பொருட் கோவை

சோழவந்தானூர்

பெரும்புலவர் அரசஞ் சண்முகனார்

(இது தொல்காப்பியம்—எழுத்ததிகாரப் பிறப்பியல் உரைவள நூலின் இணைப்பு, பக்கம் 132—இன் தொடர்ச்சி, இதனைச் "செந்தமிழ்" மாத இதழ்களி லிருந்து படியெடுத்து உதவியவர் சோழவந்தான், சி. கன்னியப்ப முதலியார். அவர்கட்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் நன்றி உரியது)

# வேண்டுகோள்

பிறப்பியல் இணைப்பாக வந்த நுண் பொருட் கோவை பக்கம் 114—இல் கீழிருந்து வரி 2க்கும் 3க்கும் இடையில் பின்வரும் பகுதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டுகிறேன்.

"அற்றேல், சண்டு உம்மைத்தொகை என்றால் எய்தும் பொருள் வேறுபாடு என்னை யெனில்?—முடிக்குஞ் சொல்லாகிய ந வ என்னும் இரண்டெழுத் துக்களும் முடிக்கப்படுஞ் சொல்லாகிய உகர ஊகாரங் களோடு எண்ணால் ஒத்து நிற்றலான், உகரம் நவ்வொடும் ஊகாரம் வவ்வொடும் நவிலாவென நிரனிறையாகவே கொள்ளப்பட்டு அவர் கருதிய பொருள் சிதையும் என்பது. எண்ணால் ஒத்து நின்ற விடத்தெல்லாம் நிரனிறைப் பொருளேயாதல் பின்னர் விளக்கப்படும்"

விடுபட்ட இப்பகுதியைக் குறித்தனுப்பியவர் சி. கன்னியப்ப முதலியார், அவர்க்கு நன்றி. இப்பகுதியும் முடிவுபெற வில்லை. கிடைக்கப் பெற்றோர் படி எடுத்து அனுப்பி வைப்பின் நன்றியுடன் வெளியிடப் படும்.

ஆ. சி.

இனி, யகாரம் அவ்வாறுயிரோடு முதலாமைக்குக் காரணம் என்னையெனின், உயிர் மிடற்றுப்பிறந்தவளியானும், யகாரம் அண்ணஞ்சேர்ந்த மிடற்றுப்பிறந்த வளியானும் பிறக்கு மியல் பினவாதலின், அங்காப்பு மாத்திரையானும் இதழ்குவிதலானும் பிறக்கும் அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் ஏழுயிரோடு முதலின் அண்ணஞ்சேர்ந்த மிடற்றினின்று காற்றுத்தடையின்றி வரும். அதனால் யகாரம் அவ்வேழுயிரோடு முதலுமியல்பிற்றாயிற்று. அண்பல் முதனாவிளிம்புறலாற் பிறக்கும் இ ஈ எ ஏ ஐ என்னும் ஐந்துயிரொடு முதலின் அக்காற்றுத் தடையுற மிடற்றுப்பிறந்த காற்றே வெளிப்படுமாதலின், அவ்வுயிர்களும் அவற்றொடு கூடிய வான யகாரவர்க்கத்து உயிர் மெய்யும் வேற்றுமை யுணரப்பட லாம். அதனால் அவ்வைந்துயிரொடு யகாரம் எக்காலத்தும் முதலாது; ஔகாரத்தோடு முதலுமியல் புடைத்தேனும் 'ஆவோ டல்லது யகரமுதலாது' (65) என ஆசிரியர் கூறுமாற்றானே தமிழ்மொழிக்கண் யகர ஔகர முதலாகிய மொழிகளின் றென்பது பெறப்படலானும், தமிழில் வந்து வழங்கற்குரிய திசைச் சொல் வடசொல்லிரண்டினுள் திசைச் சொல்லினு மின்றென்பது ஆசிரியர் காலத்தின் பின்னுங் கடைச்சங்கத்தார் காலம் வரை வழங்காமையானறியப்படுமாதலானும், வடமொழியுள் ஔகர உயிரேயில்லையாதலானும், அதனொடும் யகாரம் எக்காலத்தும் முதலுமாறில்லை. அவ்வாறெழுத்து மொழிந்த ஏனைய ஆறெழுத் தொடு முதலுமியல் புடைமையின் ஆசிரியர் காலத்து ஆகார உயிரொடு மாத்திரமுதலாய யகாரம் பிற்காலத்து அவற்றுள் ஏனைய உயிரொடும் முதலாயிற்றென்பது.

இனி வகரம் இதழ்குவிதலாற் பிறக்கு முயிரெழுத்தொடு முதலுமியல்பின்றாயினும் ஔகாரத்தின்கண் அங்காப்புமாத் திரையுடைய அகரமுதலாகி நிற்றலின் அதனொடு மாத்திரம் முதலுமாறு போல, யகாரம் அண்பல் முதனாவிளிம்புறலாற் பிறக்கும் இ ஈ எ ஏ ஐ என்னும் ஐந்துயிருள் ஏனையவற்றொடு முதலாதாயினும் ஐகாரம்முதற்கண் அகரவோசையுடைமைபற்றி

அதனொடு மாத்திரம் முதலில் வேண்டுமெனின், ஔகாரத்தின்கண் அகத்திசைக்கும் அகரமும் உகரமும் ஒன்றனுள் மற்றொன்று கலவாது காரியப்பட்டுப் பிறக்குமாதலின் அதனொடு வகரமுதலாதலமையும். இகர யகர மிறுதி விரவு (58) மென ஆசிரியர் கூறுமாற்றான், அவ்வெழுத்துக்கள் அகரத்தொடு கலக்குமியல்பினவென்பது பெறப் படலின், ஐகாரத்தின்கண் அகரம், ஔகாரத்தின்கண் அகரம்போலத் தனித்து இயலாமையின் யகாரம் அதனொடும் முதலாதென்பது.

இனி, அவ், இவ், உவ், தெவ் என்னும் நான்கு வகரவீற்று மொழிகளேயன்றி, எவ் என்னு மொழியுமொன்றுளதாக இலக்கணக்கொத்துநூலார் உதாரணங் காட்டினமையின் ''வகரக்கிளவி நான்மொழியீற்றது'' (81) என்னும் வரையறை யிகந்துபடுமெனின் ;— அது பொருந்தாது, என்னை? அ இ உ என்பன சுட்டிடைச் சொல்லாயினும், 'எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே' (640) என ஆசிரியர் கூறுதலின் அவை முதனிலையாகி வகரவிறுதிநிலை பெற்று அவ் இவ் உவ் எனப் பெயராதலமையும். எகரம் பெயர் வினை யிடை யுரி என்னும் நான்கு சொல்லுள் ஒன்றாகாது எழுத்தாகவே நிற்றலின் அது முதனிலையாதலும் யாதானுமொரு விகுதி பெறுதலு மின்மையானென்பது.

இனி, எகர முதனிலையாகாவிடின் எவன் எவள் எவர் எது எவையென ஐம்பாற் பெயர்கள் வழங்கலென்னையோவெனின், ஆசிரியர் பெயர்வினை உரி என்பன அடியாகப் பிறந்த காரணப் பெயரையொழித்து இடைச் சொல்லடியாகப் பிறந்த காரணப் பெயரையும் முதனிலையின்மையிற் காரணம் பெறுத இடுபெயரையும் வரையறை செய்யுடமித்து அவற்றுட் சில பெயர் திரிந்து வேறு பெயர் போன்று வழங்கினும் அவை வேறு சொல்லாகவென அவற்றையுநீக்கி இயற்பெயர் மாத்திரையே கொண்டாராதலின் ''அவ்வழி, அவனிவனுவனென வருஉம் பெயரும், அவளிவ ளுவளென வருஉம் பெயரும், அவரிவ ருவரென வருஉம் பெயரும், யான்யாம் நாமென வருஉம் பெயரும், யாவன் யாவள் யாவரென்னு, மாவயின் மூன்றே டப்பதினைந்தும், பாலறி வந்த உயர்திணைப் பெயரே'' (647) எனவும், ''அதுவிது உதுவென வருஉம் பெயரு, மவை முதலாகிய வாய்தப்பெயரு, மவை யிவை யுவையென வருஉம் பெயரு, மவைமுத லாகிய

வகரப் பெயரும், யாதுயா யாவை யென்னும் பெயரு, மாவயின்
மூன்றொடப் பதினைந்தும், பாலறி வந்த வஃறிணைப் பெயரே
(652) எனவும் ஒவ்வொரு பாற்கண்ணும் எல்லாவற்றையும்
எஞ்சாதுணர்த்தும் இருதிணை ஐம்பாற் பெயர்களை வரை
யறுத்துப் பதினைந்துமென முற்றும் மையாற் கூறினமையின்,
அவை போலவே இருதிணை ஐம்பாற் பொருளை எஞ்சாதுணர்த்து
வனவாகலின், எவன் முதலியவும் அப்பதினைந்துமென்ற சொற்
களின் வேறுகாவென்பது பெறப்படும்.

அதனுளே, எவன் எவள் எவர் ஏவன் ஏவள் ஏவர் முதலியன
யாவன் முதலிய சொற்களின் திரிபெனப்படுமேயன்றி எகர
ஏகாரங்களை முதனிலையாகப் பெற்றுவந்தனவல்லவென்பது.

அற்றேல் பிறன் பிறள் முதலியன அப்பதினைந்து மென்றவற்
றுள் அடங்காமையானும், யாவன் முதலியவற்றின்றிரிபே எவன்
முதலியன என்றூற்போல அவற்றுளொன்றனது திரிபாமெனிற்
பொருள் வேறுபாடுடைமையாற் பொருந்தாமையானும்,
அவற்றையுமெடுத்துக் கூறி வரையறை செய்யாமையென்னையோ
வெனின், அவனென்பது உயர்திணை யாண்பாற் பொருளெல்லா
வற்றையும் எஞ்சாதுணர்த்தும்: யான் என்பது உயர்திணைத்
தன்மையொருமையை எஞ்சாதுணர்த்தும்: அவ்வாறே ஏனையவும்
எஞ்சாதுணர்த்தும்; அதுபோலப், பிறனென்பது உயர்திணை யாண்
பாலை எஞ்சாதுணர்த்தலின்றி முன்னர்ச் சுட்டப்பட்ட ஆண்
பாலையொழித்து மற்றைய ஆண்பாற் பொருளையே யுணர்த்த
லானும், பிறள் முதலியவும் அத்தன்மையவே யாதலானும், அவன்
முதலாகக் கூறிய அப்பதினைந்துமென்றவற்றோடு வேறுபாடுடை
மையின் அவற்றோடு பிறன் முதலியன சேர்ந்து எண்ணப்படா
வாயின வென்பது. இனி ஆசிரியர் யானென்பதொன்றே கூறி
நானென்பது கூறாது விடுத்தமையாற் பொருளொப்புடைய
வற்றுள் ஒன்று கூறின், ஏனையவுமுய்த்துணர்வரெனக் கருதி
னாரெனல் பெறப்படலின், யான் நான் என்பன போலவே யாவன்
முதலியவும் எவன் ஏவன் முதலியவும்பொருளொப்புடைய வாத
லான், எவன் ஏவன் முதலியவற்றை யாவன் முதலியவற்றின் திரி
பெயரெனல் சாலாது; அவை இயற்பெயர்களேயெனின்;—அது
பொருந்தாது. என்னை? யாம் நாம் என்பனவும், யா யாவை என்
பனவும். அது அஃது முதலியவும், அவை அவ் முதலியவும்,
பொருளொப்புடையனவாதலின் அவற்றுள்ளும்ஒன்று கூறிப்பிறி

தொன்று கூறுதுவிடுத்தல் வேண்டும். அவ்வாறின்றி "யாம நாமென வருஉம் பெயரும் (644) எனவும், "யா யாவை என்னும் பெயரும்"(652) எனவும்' "அதுவிது வுதுவென வருஉம் பெயரும், அவை முதலாகிய வாய்தப்பெயரும்" (652) எனவும், "அவையிவையுவையென வருஉம் பெயரும், அவை முதலாகிய வகரப் பெயரும்" (652) எனவும் வேறு வேறு கூறலினென்பது.

இனி, நாம் என்பது முதலியன வேறு சொல்லெனக் கருதிக் கூறிய ஆசிரியர் நானென்பதும் வேறெனக் கருதிக் கூறாமை என்னை யெனின்? யானென்பதே நானெனத் திரிந்து வழங்க லன்றி அது வேறு சொல்லாகாமையிற் கூறாராயினர். அதனை வேற்றுமை பெறுங்கால் நாம் என்பது நம் எனக் குறுகினாற் போல நானென்பது நன் எனக் குறுகாது, யானென்பது திரியு மாறுபோலவே என்னெனத் திரிந்து உருபேற்றலா னுணரப்படு மென்பது.

இனி, யாமென்பதன்றிரிபெயரே நாமெனக்கொள்ளாது அதனை வேறு செல்லெனக் கொண்டதென்னையோவெனின் — வேற்றுமை பெறுங்கால் யாமென்பது எம்மெனவும் நாமென்பது நம்மெனவுந்திரிந்து இருவேறு முடிபுபெறலான் அவை யிருவேறு சொல்லாதலறியப்படுமென்பது.

இனி, அவன் அவள் அவர் முதலியன ஒரு முதனிலை யடியாகவே தோன்றினும் விகுதி வேறுபாட்டான் வேறு வேறு கூறப்பட்டாற்போல யாம் நாம் என்பன கள்ளொடுசிவணி, யாங்கள் நாங்கள் என வழங்கலான், அவற்றையும் வேறு கூறல் வேண்டுமெனின் அது பொருந்தாது : என்னை? யாம் நாம் என்பனவே தன்மைப் பன்மையை யுணர்த்தக் கள்ளென்பது அவன் முதலியவற்றுள் அன் முதலியனபோல விகுதிக்குரிய பொருளுணர்த்தாது நிற்றலின், அவை யாம் நாம் என்பன வற்றின் றிரிபெனப்படுமன்றி வேறு சொல்லெனப் படாமையா னென்பது,

இனி, யா யாவை என்பன வேற்றுமை பெறுங்கால் யாவற்றை யாவற்றுனெனப்பட்டு ஒன்றாகவே முடிதலின், யாவென்ப தன்றிரிபே யாவையெனக் கோடற்பாற்றெனின்; அது பொருந்தாது. என்னை? அவையிரண்டும் உருபேற்றவழி ஒன்று

போற் காணப்படினும் சாரியை பெறுங்கால், யா என்பது இயல்பாக நின்றும் யாவை என்பது வகர ஐகாரம் கெட்டும் வெவ்வேறு செய்கைப்படலானும், யா என்பது யாகாவாராயினு மென இரண்டாவது தொகப்பெற்றுவந்தாற்போலவும் அவை கண்டான் இவைதந்தான் உவைபெற்றான் என்றாற்போல ஏனைய வகர ஐகாரம், உருபு தொகப்பெற்றுவந்தாற்போலவும் யாவை யென்பது வாராது யாவற்றையென விரிந்தே வரலானுமென்பது.

இனிச் சுட்டெழுத்துக்கள் முதனிலையாகி, வை விகுதி பெற்று அவை இவை உவையென நின்றாற்போல, யா என்பது முதனிலையாகி வை விகுதிபெற்று யாவையென நின்று அதுவே யா எனத் திரிந்ததெனவும் படுமாதலின், யாவை என்பதொன்றே கூறி யா என்பது கூறாது விடுத்தல் வேண்டுமெனின்; அது பொருந்தாது என்னை; யா என்பதே அஃறிணைப்பன்மை வினாப்பெயரை புணர்த்தலின், அது முதனிலையாகி விகுதிபெற்றதெனல் அமையாமையானென்பது.

இனி யாம் நாம் என்பனவே. தன்மைப்பன்மை யுணர்த்தி விகுதிப்பொருள் பெறாதகள்ளொடு சிவணி, யாங்கள் நாங்கள் என நின்றாற்போல யா என்பதே அஃறிணைப் பன்மை வினாவை புணர்த்தலின் அதுவே விகுதிப்பொருள் பெறாத வகரஐகாரத் துடனாவது ஐகாரத்துடனாவது கூடி, யாவை யென்றா யிற்றெனக் கோடுமெனின் கள் என்பது ஆடூஉக்கள், மகடூஉக்கள் என உயர்திணை ஆண்பாற் கண்ணும் பெண்பாற்கண்ணும் பன்மையுணர்த்தியும் அவர்கள் என உயர்திணைப்பன்மைக்கட் பொருளின்றியும், மரங்கள் மலைகளென அஃறிணை இயற்பெயர்க்கட் பொதுமை நீக்கிப் பன்மைக்குரிமையாக்கியும், பெயர்கட் கீற்றில் நிற்றலே அன்றிச் செய்தனகள், செய்வனகள் என்றாற்போல விகுதிப்பொருளின்றி அஃறிணைப்பன்மை வினைக்கீற்றிலும் வரும். அதனால், அது யாங்கள், நாங்கள் என உயர்திணைத் தன்மைப் பன்மைக்கண்ணும் வருமியல் புடைத்தாயிற்று. வை என்பது சுட்டிடைச் சொல்லைச் சார்ந்து. அவை, இவை, உவை. எனப்பெயராதலும் விகுதிப் பொருளின்றிப் பல்லவை, கட்டியவை, கரியவை, செய்தவை, உண்டவை, உண்பவை, என்றாற்போல அஃறிணைப்பன்மை அகர விறுதிநிலையைச் சார்ந்து வருதலுமின்றி யாண்டும், இயற்பெயரைச் சார்ந்து வை என்னும் இறுதி நிலை,

பொருளின்றி வந்ததெனல் அமையாமையானும் பறவை முதலிய வற்றுள் ஐகாரமே, வினைமுதற் பொருளுணர்த்தலின் ஆண்டுள்ள இறுதிநிலை வகர ஐகார மாகாமையானும் அவவைகாரமே ஈண்டு முளதெனின்; அது கொலைமுதலிய தொழிற் பெயர்க்கணன்றி ஏனைய விடத்து விகுதிப்பொருளின்றி வாராமையானும், சாரியை எனின், கோஒனை கோஒனொடு, என்றாற்போலச் சாரியை கெடாமலுருபேற்று யாவையை-யாவையொடு, என வரல் வேண்டும்: அவ்வாறு வாராமையானும், யா என்பது போலவே யாவை என்பதும் பிறிதோரியற் பெயரெனக் கொள்ளப்படுமே யன்றி—யா என்பதன்றிரிபெயரெனக் கொள்ளப் பொருந்தா தென்பது,

இனி அது இது உது என்பனவும், அஃது இஃது உஃது என் பனவும் வேற்றுமைப்படுமிடத்து அதனை அதனன் என் ஒன்றாகவே முடிதலின் ஒன்பது என்பதே ஒன்பஃதென்ப என ஆஃதம் விரிந்து நின்றாற் போல, அது முதலிய அம்மூன்றும் ஆய்தம் விரிந்து அஃது முதலிய அம்மூன்றாகத் திரிந்து நின்றன வெனப்படுமாதலின், அவை முதலாகிய ஆய்தப்பெயருமென வேறுகூறல் வேண்டாவெனின்; வேற்றுமைக்கண் அதனை அதனொ னென வடிவானொத்தனவாயினும் அது முதலியனவே ஆய்தம் விரிந்து நிற்பின் அவை இயற்கைமொழியாகாது செயற்கை மொழியாக முடிதலிற் றமக்கென வேறு விகுதி பெறாது பொன் என்பது பொலமெனத் திரிந்தவிடத்து மகரத்தின் விதிபெற்றாற் போல ஏனைய வாய்தத் தொடர்க்குற்றுகர விதியே பெறல் வேண்டும். அவ்வாறு ஏனைய ஆய்தத் தொடர் போல வேற்று மைக்கண் ஆய்தம் கெடாமல் இன்சாரியை பெறுதலின்றி ஆய்தங் கெட்டு அன்சாரியை பெறுதலானும் அல்வழிக்கண் நாற்கணத் தும் ஆய்தம் கெடாமல் முடிதலின்றி உயிர்வருவழிக் கெடாமலும் ஏனைய வருவழிக்கெட்டும் முடிதலானும் வேறு சொல்லாத லறியப்படுமென்பது.

இனிக் கூடியவை நடந்தவை முதலியவற்றுள் வை என்னு மிறுதியே காணப்படலானும் சுட்டொழிந்த ஏனைய விடத்து வகர விறுதி காணப்படாமையானும் வையிறுதியே ஐகாரம் கெட்டு அவ் இவ் உவ் என நின்றனவெனப் படுமெனின்; அது பொருந்தாது என்னை? அவ்வகரவீறு இயல்பீறாகாது பிறிதொன் றனது விகாரமாயின், தனக்கெனவேறு விதிபெறாது தெவ் என்

னும் வகரவீறுபோல உகரம் பெறுதல் வேண்டும். அவ்வாறின்றி வேற்றுமைக்கண்வற்றுப் பெற்றும் அல்வழிக்கண் வல்லெழுத்து வருவழி ஆய்தமாகியும் மெல்லெழுத்து வருவழி அவ்வெழுத் தாகியும் ஏனையவைபுணரி னியல்பாகியுமுடிந்து வேறு சொல் லாகவே நிற்றலினென்பது:

இனி அஃது அவ் முதலியன இயற்கைமொழியாகாவிடின் ஏனைய ஆய்தத் தொடர் ஏனைய வகரவீறுபோல முடிதல் வேண்டு மென்பதும் தமக்கென வேறுவிதி பெறலாகாதென்பதும் என்னை யோவெனின்; மரூஉ முடிபு முதலியவாக வழக்கினும், வலிக்கும் வழி வலித்தன் முதலியவாகச் செய்யுளினும் எல்லா மொழியும் விகாரமுறு மியல்புடையவாதலின், அவ்விகாரமொழிகளும் தமக் கென வேறு விதி பெறல் வேண்டும். அவ்வாறு பெருமையானும் அங்ஙனம் வகுக்கப் புகினும், அது வரம்பின்றி முடிதலானும் விகாரமொழிகள் தமக்கெனவே வேறுவிதி பெறுதலிலக்கணமன் றென்பது.

இனி அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் என்றாற் போலவே எக்கொற்றன் எந்நாள் எவ்யானை எவ்வாடை என எகரம் நிலைமொழியாக நின்று வருமொழி நாற்கணத் தொடும் புணர்ந்து முடிதலின் அதுவே விகுதியிடைச் சொல்லொடு புணர்ந்து எவன் எவள் முதலியனவாக வழங்கலுமமையும்; அதனானே, யாவன் முதலியவற்றின் றிரிபெயரெனல் வேண்டாவெனின்: அது பொருந்தாது. என்னை; "வினையெஞ்சு கிளவியுமுவமக்கிளவியு, மெனவெனெச் சமுஞ்சுட்டினிறுதியு, மாங்கவென்னு முரையசைக்கிளவியும், ஞாங்கர்க்கிளந்த வல்லெழுத்து மிகுமே" (204) எனவும், 'சுட்டின் முன்னர் ஞநமத்தோன்றி, னொட்டியவொற்றிடை மிகுதல் வேண்டும்" (205) எனவும், "யவமுன்வரினே வகர மொற்றும்" (206) எனவும் உயிர்முன்வரினுமாயியறிரியாது (207) எனவும், "நீடவருதல் செய்யுளுளுரித்தே," (208) எனவும் "இனியணியென்னுங் காலையுமிடனும்' வினையெஞ்சுகிளவியும் சுட்டுமன்ன" (236) எனவும், "சுட்டினியற்கை முற்கிளந் தற்றே" (235) எனவும், சுட்டின்முன்னருமத் தொழிற்று கும்" (255) எனவும், "ஏனவைவரினே மேனிலை யியல்பே (256) எனவும், 'தன்ஒருமிலுரைக்கும் வினாவின்கிளவி' ( 4) எனவும், "மாறுகொளெச்சமும் வினாவும்" (275) எனவும், அ இ உ

என்னு மூன்று சுட்டையும், ஆ ஏ ஓ என்னு மூன்று வினாவையும் நிலைமொழியாக நிறுத்தி அவற்றை வருமொழிநாற்கணத் தொடும் புணர்த்தி விதிகூறிய ஆசிரியர், எகரமு மோரிடைச் சொல்லாயின் அதனையும் நிலைமொழியாக நிறுத்தி நாற்கணத் தொடும் புணர்த்தி விதிகூறுவர். அவ்வாறுகூறாது "எகர வொகரம் பெயர்க்கீறாகா, முன்னிலை மொழிய என்மனார் புலவர் தோற்றமுஞ் சிறப்புமல்வழியான" (272) எனவும் "தேற்றவெகர முஞ் சிறப்பினொவ்வும், மேற்கூறியற்கை வல்லெழுத்துமிகா" 273) எனவும், ஏனையவற்றுக்கே விதிகூறி, எகர ஒகரம் இடைச் சொல்லாக எழுதலின்றென விலக்கினமையானும் அவை பெயர் வினை உரி என்னும் ஏனைமூன்றனுள்ளும் ஒன்றாகாமையானுமென் பது. இதுவன்றிப்பொருள்குறியாதன சொல்லாகாமையிற் பெயர் வினை இடை உரி என்னும் நான்கனுள் எச்சொல்லாயினும் முதனிலையாக நின்று விகுதியொடு புணர்ந்து பெயராக வழங்கு மாயின் அது நிலைமொழியாக நின்றுவருமொழியோடு புணர்ந்தும் வழங்கலியற்கை. அவ்வியற்கையானே அகர முதலிய சுட்டிடைச் சொற்களும் விகுதியொடு புணர்ந்து அவன் இவன் உவனெனவும் வருமொழியோடு புணர்ந்து அக்கொற்றன் இச்சாத்தன் உத்தேவ னெனவும் வழங்கும். இவ்வாற்றானே, எவன் ஏவன் முதலிய வற்றுள் எகர ஏகாரங்களை முதனிலையெனின், அவை வருமொழி யோடு புணர்ந்தும் வழங்கல் வேண்டுமன்றோ? அவ்வாறு ஏகாரம் வருமொழியோடு புணர்ந்து வழங்காமையின், எவன் முதலிய சொற்கள் யாவன் முதலியவற்றின் றிரிபெயரெனவே கொள்ளப் படுமாதலின் அதுபோலவே எவன் முதலியவும் திரிபெயரெனப் படுமன்றி ஏகர முதனிலையாகி விகுதி பெற்றனவல்லவென்பது.

இனி ஒத்ததறிவான் எனவும், ஒக்குமெனவும், ஒகரமுதனிலை யாகி வினைவிகுதியொடு புணரினும் பெயர் விகுதியொடும் வரு மொழியொடும் புணராமையின், அதுபோலவே ஏகாரமும் பெயர் குதியொடு புணருமன்றி வினைவிகுதியொடும் வருமொழி யொடும் புணராதெனக் கொள்ளுமெனின்; அது பொருந்தாது என்னை; மலைமுதலிய பெயர்விகுதியொடு புணர்ந்து பிறிதொரு பொருளுணர்த்தி' மலையனென்றாற் போலப் பிறிதொரு பெயர்ச் சொல்லாகும். அது வருமொழியொடும் புணர்ந்து எட்டுவேற்று மையுள் ஒன்றனையேற்று மலைபெரிது என்றாற்போலத் தன் பொருளையுமுணர்ந்தும். சில இடைச் சொற்கள் பெயர் விகுதி

யொடு புணர்ந்து அவன் அன்னன் அனையன் என்றாற் போல பெயராகின் அதுவே வருமொழியொடு புணர்ந்து அக்கொற்றன் அன்னகொற்றன் அனையகொற்றன் என்றாற்போலப் பெயர்க்கு விசேடணமாகியும் வரும். சில இடைச் சொற்கள் வினைவிகுதி யொடு புணர்ந்து போன்றான் நிகர்த்தான் என்றாற் போல முவிடத்து வினையாகிவரின், அவையே வருமொழியொடு புணர்ந்து, போல்கொற்றா நிகர்கொற்றா என ஏவல்வினையாகி யும் வரும். சில இடைச்சொற்கள் பெயர் விகுதியொடும் வினை விகுதியொடும் புணர்ந்து பெயராதலும் வினையாதலுமின்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து நீயே கொண்டாய் நிலனே நீரே என்றாற் போலவரும். உரிச்சொல் பெயராகியும் வினையாகி யும் பெயர்க்கும் வினைக்கும் விசேடணமாகியும் விகுதியேற்றும் ஏலாதும் கவின், கவினிய, கடிக்கமலம், தாய்பெரிது, என்றாற் போல வரும். வினைச் சொல் பெயர் விகுதியொடு புணரு மிடத்துத் திரிந்து நடையனென்றாற் போல இருதிணை ஐம் பாலுள் ஒன்றனையுணர்த்திப் பிறிதொரு பெயர்ச் சொல்லாகி வரும். அது வேற்றுமையேற்று வருமொழியொடு புணர்ந்து நடை நன்று என்றாற்போன்று வரும். வினைவிகுதியொடு புணரிற் காலங்கொண்டு நடந்தானென்றாற் போலப் பிறிதொரு பொருளின் புடை பெயர்ச்சியையும் அப்பொருளையுமுணர்த்தும். அதுவே வருமொழியொடும் புணர்ந்து நடகொற்றா என்றாற் போல ஏவலாகியும் வரும்.

இவ்வாற்றான் ஒகரமே முதனிலையாகி வினை விகுதி பெறுமா யின் அதுவே ஏவல வினையாய் வருமொழியொடும் புணரல் வேண்டும். அவ்வாறின்மையானும், தந்தான் தருவான் செத் தான் வெந்தான் முதலியவற்றுள் முதற்கணிற்றல் பற்றித் தரு, செ, வெ, முதலியன முதனிலையெனக் கொள்ளப் படாமையானும், ஏவற்பொருண்மையுடைய தா—சா—வே என்பன முதலானவையே முதனிலையெனக் கொள்ளப் படலானும் அதுபோலவே ஒத்தான் முதலியவற்றுள், ஒகரம் பொருள்பயவாமல் ஒவ்வு என்பதே ஏவலாகநிற்றலின் அதுவே முதனிலையெனப்படுமன்றி ஒகரம் முதனிலை யாதல் இன்மை யாலென்பது.

இனி ஏவன் முதலியவற்றுள் ஏகாரம் பிறபெயரோடு புணரா மையின் அது முதனிலையாகாமை அமையும்: எவன் எனவும்

எக்கொற்றன் எனவும் எகரம் விகுதியுடனும் பிறவெபயரொடும் புணர்ந்து முடிதலின் அதனை முதனிலையாகாதெனக் கூறலமையாது. பின் ஆசிரியர் எகரத்தை நிலைமொழியாக நிறுத்தி விதி கூறாமை அது சுட்டெழுத்தோடொத்த குற்றெழுத்தாகலின் சுட்டெழுத்துக்குக் கூறிய விதியே தன்னைமுடித்த லென்னு முத்தியால் அதற்குமெய்துமெனக் கருதியெனின்; அது பொருந்தாது. என்னை, அது கருத்தாயின் அகரச்சுட்டுக்குக் கூறியவிதியே இகர உகரங்களுககும் ஒத்தலின் அவற்றையும் கூறாது விடுத்தல் வேண்டும். அவ்வாறின்றி, வேறு கூறலானும், எகர ஒகரம் முன்னிலை மொழியாகிய வினையின் கண்ணும், தேற்றமுஞ் சிறப்புமாகிய இடைச்சொற்கண்ணும், ஏகாரம் அளபெடுக்குமிடத்துச் செயற்கையின் ஈறுதலன்றி, ஏனையவிடத்து இயற்கையின் ஈறுகாவென விலக்கினமையானு மென்பது.

இனி, "எயா, முதலுமாவேவீற்று, மேயிருவழியும் வினவாகும்மே "எகரவினா முச்சுட்டின் முன்னர்" (நன். 163) "இவையடைசுட்டுவினாப்பிறமற்றோ, நற்றுனவ்வீறு" (நன். 276) என நன்னூலார் கூறினமையின் எ, ஏ, யா என்பனவும் சுட்டும் பிற மற்று என்பனவும் முதனிலையாதல் பெறப்படலின் அகரப் முதலியவற்றைச் சுட்டெழுத்தென்றும் முதனிலையென்றுங் கொண்டு எகர முதலியவற்றை வினாவெழுத்தாகா வென்றும் முதனிலையாகாவென்றும் கூறலென்னையோ வெனின்;— நன்னூலார் ஆசிரியர் 'ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா' (32) என வரையறை கூறியிருப்பவும் அதனை நோக்காது எழுத்தாதலேயன்றி வினாவாகாத எகரத்தையும் யாவென்பதையும் வினாவெழுத்தென்றும் ஈற்றினன்றி முதற்கண்வாராத ஏகாரத்தையும் முதற்கண்ணும் வருமென்றும், யாவன் யார் யாங்கு முதலிய வினாப்பெயர், வினாவினை, வினாவிடைச் சொல் முதலியவற்றுள்' முதற்கணின்ற, எ, ஏ யா என்னுமெழுத்தைக் கண்டு வேற்றுமையுணராது மயங்கிக் கூறினர். அஃதாசிரியர் கருத்தாகாமையின் அவை வினாவெழுத்தும் முதனிலையுமாகாமல் எழுத்தாகவே நிற்குமென்பது.

இனிச்சுட்டெழுத்து முதனிலையாகிய அங்கு அன்று அவன் அங்ஙனம் அங்கனம் அவ்வயின் ஆண்டு ஆங்கு முதலிய இடைச் சொற்களும் அவன் முதலிய பெயர்களும் அச்சுட்டெழுத்தே முதனிலையாகிப் புறத்துநின்ற அக்கொற்றன் முதலிய பெயர்களு

முளவாயினுற்போலவே எங்கு என்று எவண் எங்ஙனம் எங்கனம் எவ்வயின் என்னுமிடைச்சொற்களும் எவன் எவள் முதலிய பெயர்களும் எவனென்னும் ஐம்பாற் பொதுப்பெயரும் எவன் என்னும் வினைக்குறிப்பும் எக்கொற்றன் முதலிய பெயர்களும் ஏவன் முதலிய பெயர்களும் யாங்கு யாண்டு யாங்ஙனம், யாங்கனம் என்னுமிடைச்சொற்களும் யாவன் முதலிய பெயர்களும் யார் என்னும் வினைக்குறிப்பும் உளவாகவும், அகர இகர உகரங்களைச்சுட்டெழுத்தென்றும் முதனிலையென்றும் கொண்டு எ—ஏ—யா-என்பவற்றை மாத்திரம் வினாவெழுத்தாகாவென்றும் முதனிலையாகா வென்றும் கூறினமை யென்னையோவெனின்:— கச்சினன், இல்லத்தன் பொன்னன் கரியன் முதலிய சொற்கள் விகுதிப் பொருளாகிய உயர்திணையாண்பாலுக்குக் கச்சு முதலியன உடைமையும் நிலமும் ஒப்பும் பண்பு முதலியவற்றுள் ஒன்றாகி அப்பொருளுக்கு வேறாகி நிற்றலின், அக்கச்சு முதலியன அப்பொருளுக்கு முதனிலையெனலமையுமாறுபோலச் சுட்டெழுத்துக்களும் விகுதிப் பொருளுக்கு வேறாகிய சேய்மையையேனும் அண்மையையேனும் அவற்றுக்கு பொதுமையையேனும் உணர்த்தலின் அவை முதனிலையாதலும் எழுத்தாக நில்லாது பொருளுணர்த்தலிற் சுட்டெனப்பெயர் பெறுதலுமமையும்; தன்மை முன்னிலைபடர்க்கையும், ஆண்பால் முதலியவும் விகுதிப் பொருளின்வேறாகிய பிறிதொன்று எனப்படாது அப்பொருளின் வகையுளொன்றெனவே கொள்ளப்படுமாதலின், அத்தன்மை முதலியவற்றையுணர்த்தற்கு யாதானுமொரு முதனிலையை அவை பெறுமாறு போலவே வினாப்பெயரும் அறிபொருள் அறியாப் பொருள் ஐயப்பொருள் வினாப்பொருள் எனப் பொருள் வகையுள் ஒன்றுவதன்றி அதனின் வேறாகிய பிறிதொன்றுதலமையாமையின் வினாப்பொருளை யுணர்த்தற்குரிய எழுத்துக்கள் எ—ஏ—யா எனலும், அவை முதனிலையாமெனலும், அவற்றுள், எகரம் நிலைமொழியாகி எக்கொற்றன் முதலியவாகவந்தனவெனலும் பொருந்தாதென்பது.

இனி எ ஏ யா வினாவெழுத்தாகாவெனின் எவன் ஏவன் யாவன் முதலியன வினாப்பொருளுணர்த்துமா றென்னையோ வெனின்; யான் யாம் என்பனவும் நீ நீயிர் என்பனவும் இது முதனிலை இஃது இறுதிநிலை எனப்பகுக்கப்படாது பிண்டமாகவே நின்று தன்மையொருமை தன்மைப்பன்மையும், முன்னிலை யொருமை முன்னிலைப் பன்மையுமுணர்த்துமாறு போலவும்,

நிலம் நீரென காட்சிப்பொருளெனவும், அன்பு அருள் முதலியன கருத்துப்பொருளெனவும் அறியப்படுமாறு போலவும் யாவன் முதலியவும் பகுக்கப்படாது பிண்டமாகவே நின்று வினாப் பொருளென அறியப்படுமென்பது.

இனி யான் யாம் என்பன அன்முதலிய விகுதி பெறுமையிற் பிண்டமெனலமையும்: யாவன் யாவள் முதலியவற்றுள் அன் அள் முதலிய ஐம்பால் விகுதிகள் காணப்படலாலும், நன்னூலார். "இவையடை சுட்டுவினுப்பிறமற்றே டுற்றனவ் விறு, என அவற்றைப் பகுபதமெனவே கொண்டமையாலும், எ, யா என்பன, விகுதிப் பொருளின் வேறாகிய பிறிதொரு பொருளுணர்த்தாவிடினும் எவன் முதலியவற்றை முதனிலையு, மிறுதிநிலையுமாகப் பகுத்தலமையுமெனின்; அலவன், கலுழன், என்பனவும், மக்கள், திங்கள், மஞ்சள், எனபவும், எக்கர் பொங்கர் எனபனவும், பருந்து, விருந்து, என்பனவும், மரப்பெயராகிய, விள, கள, என்பனவும், ஈற்றின்கண், அன். அள். அர். து. அ. என்பவற்றையுடையவாயினும், அல கலுழ் மக்கு திங்கு முதலியவாகப்பிரிப்பின் அவை பொருள் பெறுமையாற் பிரிக்கப்படாமைபோல யாவன் முதலியவும் பகுக்கப்படா.

அவை பகுக்கப்படுமாயின் யான் யாம் என்பனவும் ஒருமை பன்மையுணர்த்தும் னகரமும் மகரமுமிருத்தல் பற்றி யா முதனிலையெனவும். னகர, மகரங்கள் இறுதியெனவும் பகுக்கப், படுமெனப்பட்டு வழுப்படுமென்பது.

இனி அலவன் முதலியவற்றுள் அன்முதலியன விகுதிப் பொருளாகிய ஆண்பால் முதலியவற்றையுணர்த்தாமையின் அவற்றைப் பகுத்தலமையாது. யாவன்முதலியவற்றுள் அன் முதலியன ஆண்பால் முதலிய விகுதிப்பொருளை யுணர்த்தலின் அவற்றைப்பகுத்தலமையுமெனின்; அப்பன், சாத்தன் என்பன வும், அக்காள் என்பதும், உம்பர் என்பதும், கழுத்து என்பதும் பிற என்பதும், அன்முதலியவற்றை ஈற்றிற்பெற்று ஆண்பால் முதலியவற்றையுணர்த்தினும், 'அப்பு, சாத்து, அக்கு, உம்பு, கழுமுதலியவாகப் பகுப்பின் அவை பொருள் பெறுமையிற் பகுக்கப்படாமை போலவும்; நீயிர் என்பது, முன்னிலைப்பன்மை

புணர்த்தும் இர் என்பது ஈற்றினின்றமை பற்றி, நீ முதனிலை இர் இறுதிநிலை யெனப்பகுத்த லமையாமை போலவும் யாவன் முதலியவும் பகுக்கப்படாவென்பது.

இனி யாவன்யாவள் முதலியவற்றுள் யா எனப் பிரிப்பினும் அது சுட்டுப் பெயர்களுட் சுட்டெழுத்துப்போலப் பொருள்பயக் குஞ் சொல்லாக நிற்றலின் அவற்றைப் பிண்டமெனக் கூறலமையாதெனின்; அவன் முதலியவற்றுள் அகரமுதலிய வறைப்பிரிப்பின் அவை சேய்மை அண்மை முதலியவற்றைச் சுட்டி இடைச்சொல்லாகவே நிற்றலின் அவை முதனிலையாத லமையும் யாவன் முதலியவற்றுள், யா என்பது பிரிக்கப்படு மாயின் அஃதிடைச் சொல்லாகாது வினுப்பெயராகி அஃறிணைப் பலவின் பாற்படர்க்கையே குறித்தலானும், உயர்திணைப்பெயர் களும் நான் நீ முதலியதன்மை முன்னிலைப் பெயர்களும் விளிப்பெயர்களும் வினுப்பெயர்களும் முதனிலையாகிப் பிறிதோர் விகுதியேற்குமியல்புடையனவல்லவாதலானும் யாவன் முதலியன பிண்டமேயென்பது.

இனி, யா என்னும் வினுப்பெயர் முதலியன முதனிலைத் தன்மை பெருமை என்னையோவெனின்; மலையன் முதலியவற்றுள் ஏனைய பகுதிகள் தம்பொருள் சிதையாமல் மலையையுடையான் மலைக்கண் இருப்போனெனப்பொருள் பட்டாற்போல யாவற்றை யுடையான் யாவற்றின்கணிருப்போன் எனப்பொருள் பயத்தல் வேண்டும் : அவ்வாறின்றி யாவன் எனவினுவப்படும் பொருண் மாத்திரையே யுணர்த்தலின் முதனிலைத்தன்மையின்மை யுணரப் படுமென்பது.

(இன்னும் வரும்)

குறிப்பு : பிறைக்கோடுகளிலுள்ள எண்கள் கழகப்பதிப்பாம் (1967) தொல்காப்பிய மூலத்திற் கண்டவாறு குறிக்கப்பட்டன.

